மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை



## மாலை—1






உரையாசிரியர்:

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர்

இந்த திருப்பாடல் மூலம் விநாயகரைத் தியானித்துப் பின்னர் நால்வர் வணக்கங் கூறிப் பதிகங்களைப் பாராயணஞ் செய்தல் நலம்.

உ

சிவமயம்

சைவசமயாசாரியர்

# நால்வர் துதி

   

| | | | |
|---|---|---|---|
| திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர் |

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

# திருஞானசம்பந்தர்



வம்பரு வரிவண்டு மணநாற
மலரும் மதுமலர் நற்கொன்றையான்
அடியலாற்பேணு எம்பிரான்
சம்பந்தன்

உ

சிவமயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

**(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்ததேவாரத் திருப்பதிகவெளியீடு)**

## மாலை—1

உரையாசிரியர்

**சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,**
**சிவபுராணச்சக்கரவர்த்தி**

ஆங்கீரஸ S வேங்கடேச சர்மா

(சங்கரன் அடிமை)








வெளியீடு நன்னாள்
பிங்கள ஆண்டு மார்கழி 17-ம் நாள்
1—1—1978

பிரசுரம்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு
மேலமாம்பலம் - சென்னை—600 033

முதல் பதிப்பு] 1978 [விலை ரூ. 2. 00



திருச்சிற்றம்பலம்

மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே.

திருச்சிற்றம்பலம்

— திருஞானசம்பந்தர் அருளியது.

சிவமயம்

5-2



# ஸமர்ப்பணம்

கலாப்யாம் சூடாலங்க்ருத சசி கலாப்யாம் நிஜதப:
பலாப்யாம் பக்தேஷு ப்ரகடித பலாப்யாம் பவது மே ।
சிவாப்யாம் அஸ்தோக த்ரிபுவன சிவாப்யாம் ஹ்ருதி புன:
பவாப்யாம் ஆனந்தஸ்புரதனுபவாப்யாம் நதிரியம் ॥

-ஆதிசங்கரர் அருளிச்செய்த
சிவானந்தலஹரீ-1

அறுபத்திநான்கு கலைகளின் வடிவாகியவர்களும், பிறைச் சந்திரனைத் தலையில் அணிந்தவர்களும், பரஸ்பர தவத்தின் பலனுயமைந்தவர்களும், பக்தர்களிடம் திருவருட்பயனைப் பிரகாசிக்கச் செய்பவர்களும், மூன்று உலகங்களுக்கும் குறைவில்லாத மங்களத்தை அருளிச் செய்பவர்களும், நினைக்குந்தோறும் ஹ்ருதயத்தில் புதிது புதிதாய்த் தோன்றுபவர்களும், ஆனந்தானுபவக் களிப்பில் திளைப்பவர்களும் ஆகிய சிவன்-சக்தி என்னும் ஒரே வடிவுடையவர்க்கு (தோடுடைய செவியன்) என்னுடைய இந்த நமஸ்காரம் உரித்தாகட்டும் என்பது மேற்படி சுலோகத்தின் திரண்ட பொருள்.

**“சிவானந்த லஹரீ”** என்ற நூலை அடியேன் அடையச் செய்து அதன் மூலம் ஆட்கொண்ட பெருமான் திருவருளே

இன்று சிவபுராண ஞான பூஜகனுகவும், சைவத்திருமுறை உரையாசிரியனுகவும் ஆகக் காரணமாயிருந்தது. எனவே அத்தெய்வ நூலின் முதல் சுலோகத்தினுல் எம்பெருமானை வணங்கி சிவ அஷ்டோத்தர சத நாமங்களுள் முதலாவதாகிய ஓம் சிவாய நம என்ற மந்திரத்தால் அருச்சித்து 'நானேயோ தவஞ்செய்தேன், சிவாயநம எனப்பெற்றேன்' என்ற திருவாசகத்தினைச் சிந்தித்து, இந்த முதல் ஞானத்தமிழ் மாலையைப் பிரானுக்குச் சூட்டும் பேறு பெறுகின்றேன்.

இங்ஙனம்
சங்கரன் அடிமை
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

---

## பொருளடக்கம்



ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கரா சாரிய ஸ்வாமிகள் கருணையுடன் அருளிய ஸ்ரீமுகம்

ஸ்ரீசந்த்ர மௌளீச்வராய நம:

ஸுத்ரா

முகாம்: லால்குடி (திருச்சி ஜில்லா) தேதி 1-12-1977

மேல மாம்பலத்தில் ஸ்ரீ சங்கர பக்த ஜன ஸபையை ஸ்தாபித்து இதன் மூலம் ஆஸ்திக் யத்தை பரப்பும் அநேக காரியங்களை செய்து வரும் ஸ்ரீ ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அங்கங்கு சிவபுராண ப்ரவசனங்களை சிவாஷ்டோத்தர சத நாமாவளியின் ஒவ்வொரு நாமாவை ஆதாரமாய்க் கொண்டு செய்து வருவதையும் இவ்விதமே தேவாரமாகிய முதல் ஏழு திருமுறைப் பாடல்களை யும் கிரமமாக சிவாஷ்டோத்தர சத நாமாக்களை

ஆதாரமாய்க்கொண்டு நூற்றெட்டு பாகங்களாக வெளியிட ஸங்கல்பம் செய்து கொண்டு முதல் பாகத்தை இப்போது வெளியிட முன் வந்திருப்பதையும் அறிந்து சந்தோஷிக்கிறோம்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதாளின் அனுக்ரஹத்துடனும் ஆஸ்திகர்களின் ஆதரவுடனும் ஸ்ரீ சர்மாவின் இந்த ஸத்ப்ரவிருத்தி பூர்த்தியடையுமாறு ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

---

**Message From Sri N. C. Krishnan, F.C.A.**
**Chartered Accountant, Madras–6**

Dated 12—10—1977

Dear Sri Venkatesa Sarma,

I am glad to note that you have taken up a major Tamil Work, and as desired, I enclose a cheque for Rs. 101/- towards prepayment for all the 108 volumes of 'THEVARAM'. Kindly acknowledge receipt. I wish you success in all your endeavours.

With kind regards,

Yours sincerely
(Sd.) N. C. KRISHNAN

---



உ

ஓம் ஸ்ரீ காயத்ர்யை நம:

## இருபதாம் நூற்றுண்டின் இணையில்லாப் பெருஞ்சித்தர் தவத்திரு காயத்திரி சுவாமிகள் இவ்வெளியீட்டுக்கு அன்புடன் அருளிய

# ஸ்ரீமுகம்

தேனூறும் தெய்வத் தமிழ் மொழியில் அப்பர் சம்பந்தர், சுந்தரர், ஆகிய மூவரும் மொழிக்கு மொழி தித்திக்கப் பாடிய செந்தமிழ்த் திருப்பாடல்கள் தேவாரம் என்பதையும், அவை தாமும் ஸப்த கோடி மஹா மந்திரங்களை நினைவுறுத்தும் வகையில் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் முதல் ஏழு திருமுறைகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் அனைவரும் அறிவர். இவ்வேழு திருமுறைகளையும் நூற்றியெட்டு சிறு பகுதிகளாக வெளியிட்டு ஒவ்வொரு பகுதியினையும் ஒவ்வொரு ஞானத் தமிழ் மாலையாகச் சிவபிரானுக்குச் சூட்டமுற்பட்டிருக்கின்றுர் நமது மெய்யன்பர் ஸ்ரீ ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா அவர்கள். இவர் நூற்றெட்டு முறை பெரிய புராணம்,



திருவிளையாடற் புராணம், கந்த புராணம், ஆகிய சிவபுராணங்களைப் பிரவசனம் செய்து ஒவ்வொரு

பிரவசனத் தொடரையும் சிவபிரானது நூற்றெட்டுத் திருநாமங்கள் ஒவ்வொன்றிற்கும் ஸமர்ப்பணம் செய்வதாகத் திட உறுதியுடன் இது வரை நாற்பத்தியேழு பிரவசனத் தொடர்களைப் பூர்த்தி செய்திருக்கிருர். பெரியபுராணத்திலும், சைவத்திருமுறைகளிலும் ஊறித் திளைத்த இவர் இத்தகைய பணியினை மேற் கொண்டது சாலப் பொருத்தமேயாகும். ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர்கள் மூலம் இவர் செய்யும் ஞானயக்ஞத் திருப்பணியும் இவரது அயரா உழைப்புக்கு மேலும் சான்று பகர்கிறது.

தற்பொழுது வெளியிடப்படும் முதல் பகுதி, முதல் திருமுறையின் முதல் திருப்பதிகமான திருஞானசம்பந்தர் அருளிச் செயலிலிருந்து ஆரம்பிக்கிறது. இத்திருப்பதிகத்தின் முதல் பாடலிலேயே தோடுடைய செவியன் என்ற முதல் சொற்றொடரிலேயே இறைவனை மாதொருபாகன் (அம்மையப்பன்) என்றும் பிரணவத்தின் உருவானவன், காயத்திரி மஹா மந்திரத்தின் பொருளாய் அமைந்தவன் என்ற இறைவனின் முத்திறன்களை திருஞான சம்பந்தப் பிள்ளையார் அமைத்துப் பாடியுள்ளார். தோடுடைய செவியன் என்பதில் தோடு என்னும் பெண்பாற்குரிய அணிகலனைப் பாடியதால் அம்மையின் பாகத்தையும், செவியன் என்பதில் உள்ள 'ன' கர ஒற்று ஆண்பாலைக் குறிக்கின்ற காரணத்தால் அப்பனின் பாகத்தையும் பாடி இறைவன் அர்த்த நாரீச்வரனுய், அம்மையும் அப்பனுமாய் ஒரே வடிவினனுய் விளங்குகின்றனன் என்று அருளிச் செய்த திறம் காண்க. காயத்திரி மந்திரம் உபதேசம் பெற்று வேதமோதும் மரபில் தோன்றிய இவர் வேதத்தின் மெய்ப்பொருளை தமிழில் பாட வந்தவராதலின், வேதமோதுமுன்

உச்சரிக்க வேண்டிய பிரணவத்தின் முதல் எழுத்தாகிய 'ஓ' காரத்தை வேத ஸாரமான காயத்திரி மஹா மந்திரத்தின் முதல் எழுத்தான 'த' என்பதின் ஒற்றெழுத்தான 'த்' என்பதுடன் சேர்த்து 'தோ' என்று எடுத்துத் 'தோடுடைய செவியன்' எனப்பாடியுள்ளார். ஆகவே நாம் மேற்கூறிய மூவ்வகைச் சிறப்புகளும் 'தோடுடைய செவியன்' என்ற ஒரே சொற்றொடரில் பிள்ளையார் அமைத்த திறம் காண்க

மேலும் முதல் திருமுறையின் முதல் எழுத்தான 'ஓ' என்ற உயிரெழுத்துடன் பன்னிரண்டாம் திருமுறையின் கடைசித் திருப்பாடலின் கடைசி ஒற்றெழுத்து 'ம்' என்பதனைச்சேர்த்துப் படித்தால் 'ஓம்' என்று பிரணவம் வருவதைக் காணலாம். எனவே இத்திருமுறைகள் பன்னிரண்டுமே பரப்பிரம்மத்தின் ஒலிவடிவான ஓங்காரத்தின் விரியே என்பதை அனைவரும் உணர்வார்கள் என நம்புகிறோம்.

இத்தகைய பெருமை வாய்ந்த தெய்வத் திருமுறைகளில் தற்பொழுது வெளியிட முனைந்துள்ள முதல் ஏழு திருமுறைகளை வெற்றிகரமாக வெகு விரைவிலேயே முடித்துப் பின்னர் எஞ்சியுள்ள ஐந்து திருமுறைகளையும் இதே முறையில் பதிப்பிக்க வேண்டுமென்றும் அதற்கு வேண்டிய ஆயுளும், ஆரோக்யமும், வாழ்க்கை வளமும், ஆசார்ய பீடங்களின் நல்லாசியும், ஆஸ்திக அன்பர்களின் பெருமழை போன்ற பொருளுதவியும் ஸ்ரீஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமென்று அன்னை காயத்திரி மாதாவின் திருவருளைச் சிந்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

சென்னை-1
18-12-77

ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள்

தர்மபுரி மாவட்டம் பாப்பாரப்பட்டி P. O. சைவமெய்யன்பர்
திரு. K. V. மூர்த்தி நாராயணச் செட்டியார் அவர்கள்
எழுதியது

தேதி 5—12—77

பேரன்பு மிக்க நண்பர் திரு. சர்மா அவர்கள் திவ்ய சமூகத்திற்கு அநேக நமஸ்காரம் செய்து எழுதிய கடிதம். நலம், நலம் வேண்டுகிறேன்.

தங்கள் 1-12–77 தேதிய கடிதம் கிடைக்கப் பெற்று விபாம் தெரிந்தேன். இந்த ஆண்டு மலரிலும் மூவர் தமிழ் மாலை பற்றிய தாங்கள் மேற்கொண்டுள்ள ஞானயக்ஞம் பற்றித் தெரிந்தேன். ஏற்கெனவே சிவபுராணப் பிரவசன ஞானவேள்வியை நடத்தி வருகிறீர்கள். தற்பேது மேற்கொண்டுள்ள மூவர் தேவாரப்பதிகங்களான 108 மாலைகளும் சிறப்பாகப் பல அரிய செய்திகளையும் கொண்டு நல்லமுறையில் தொகுக்கப்பட்டு என்றென்றும் வாடாமலராக சர்வேச்வரனுக்கு அணிவிக்க அவன் அருள் வேண்டிப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள் பெரும்பணிக்குத் தாங்கள் தெரிவித்துள்ள இந்த சிறு தொகையாக ரூ 101-00 க்கான இண்டியன் பேங்க் டிராப்டு இத்துடன் அனுப்பியுள்ளேன். கிடைத்தமைக்கு உடன் கடிதம் எழுத வேண்டுகிறேன். மலரில் 108 மாலைகள் வெளிவர 10, 15 ஆண்டுகள் ஆகலாமெனத் தெரிவித்துள்ளீர்கள். இதனை 5; 10 ஆண்டுகளான முயற்சியாக அமைவது உசிதம் என நினைக்கிறேன்.

இங்ஙனம் தங்கள்
அன்பன்
(Sd.) Moorthy Narayana Chetty

சிவமயம்

# உரையாசிரியர் முன்னுரை

வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர்
மெய்ப்பாசுரத்தைக்
குறிஏ றியஎல்லே அறிந்துகும் பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக்கு அவர்தம்திருப் பாதம் தந்த
நெறியே சிறிதியான் அறிநீர்மை கும்பிட்டேன்
அன்பால்

பன்னிரண்டாவது திருமுறையான பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தர் புராணத்தில், சேக்கிழர் பெருமான், வைகையில் வெள்ளத்தினை எதிர்த்துச் சென்ற ஏட்டினில் அடங்கிய மெய்ஞ்ஞானப் பாசுரத்திற்கு உரையாக இருபத்தி மூன்று பாடல்கள் அருளிச்செய்த பிறகு மேற்கண்டவாறு அருளியிருக்கிருர். திருஞானசம்பந்தரின் பதிகத்திற்கு நான் உரை கூறினேன் என்ருது அவர் திருப்பாசுரத்தை அவர் தம் திருப்பாதம் தந்த நெறியே சிறிதியான் கும்பிட்டேன் என் கிருர். 'உலகெலாம்' என்று தில்லைக்கூத்தனல் அடி எடுத்துக் கொடுக்கப்பட்டுப் பசுகரணங்கள் பதிகரணங்களாகிப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமானே இங்ஙனம் தமது உரையெழுதிய பணியைக் கும்பிட்டேன் என்று கூறு வாரே யானல், ஒன்றுக்கும் பற்றில்லாத, உள்ளீடில்லாத பதரினையொத்த எம்போலியர்கள் "உரை கூறுகிறேன்" என்று மொழிதலும் பொருந்துமோ? எனவே அடியேன் செய்யும் சிவ புராணப் பிரவசனங்களை ஞானபூஜையாகக் கொண்டது போலவே இந்த முயற்சியையும் ஞான பூஜையாகவே கொள் கிறேன். திருமுறை சேவித்தல் என்பதும் இதுவே.

ஞான நூல்தனை ஓதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்று
ஈனமில் பொருளைச் சிந்தித்தல் இவை ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூஜை

என்ற சித்தியாரின்படியும் இது இறைவனடியடைவிக்கும் எழில் ஞானபூஜையேயாகும் அல்லவா? அங்ஙனமிருக்க உரை எழுதினேன் என்பதும், உரையாசிரியர் என்பதும் குறிப்பிட்டுள்ளது எற்றுக்கோ எனின் அது உலக வழக்கின் பொருட்டு உபசாரமாகக் கூறப்பட்டுள்ளது என்க, அடியவர் திருக்கூட்டம் இந்த எனது செயலினை அபசாரமாகக் கொள்ளக் கூடாது என்று வேண்டுகிறேன்.

## திருமுறைகளின் சிறப்பு

பன்னிரு திருமுறைகளின் சிறப்பு, வரலாறு முதலியவை களையெல்லாம், உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த திரு முறை கண்ட புராணத்தினை அடியேன் சிறு வசன நூலாக வெளியிட எண்ணங்கொண்டுள்ளபடியால், ஆங்கு விரித்துக் கூறுகிறேன். தவத்திரு காயத்திரி சுவாமிகளார் தமது ஆசி யுரையில் கூறியபடி பன்னிரு திருமுறைகளும் ஓங்காரத்தின் விரியேயாகும். ஓங்கார உருவனாகிய சிவபிரானைப் பொருளாகக் கொண்டவையாகும். ஒவ்வொரு பாடலும் உயிருள்ளவை. பல அற்புதங்களை நிகழ்த்தியவை. அவற்றையெல்லாம் பதிகங் களின் வரலாற்றில் விரித்துக் கூறுவேன். அம்மாதிரியான அற்புதங்களை அவைகள் நிகழ்த்தியமைக்கு யாது காரணம்? ஞானசாத்திர நூலிலுள்ள ஒரு பாடலினை விடையாகத் தரு கிறேன்.

பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன்று ஏவிக் கராங்கொண்ட - பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம் போலல்லாமை காண்.

—திருக்களிற்றுப்படியார்

பதிகரணம் வாய்க்கப் பெற்ற பெரியோர் வாக்குகளான தால் அவை அத்தகைய அற்புதங்களை விளைவித்தன. எனவே இப்பதிகங்களின் சிறப்புகளை எவராலும் அளவிட்டு இவ்வள விற்றே என்று வரையறை செய்ய முடியாது என்பது திண்ணம். மேலும் திருஞானசம்பந்தப் பெருமான் தமது அற்புதத் திருவாக்கினாலேயே 'எனதுரை தனதுரையாக் கொண்டு' என அருள் செய்திருப்பதைக் காணலாம். இறைவனார் நாயன்மாரது வாக்குகளைத் தமது வாக்குகளா கவே கொண்டு அவற்றில் பொதிந்த ஆணைகளை நிறைவேற்று கின்றார் என்பது தெளிவு.

## தொகையும் வகையும்

இனி இத்திருமுறைகள் பன்னிரண்டு ஆகும். இவற்றை முறை பெற வகுத்தவர் திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற திராவிட வேதவியாசர் எனப்புகழ்பெற்ற நம்பியாண்டார் நம்பி ஆவார். தேவாரப் பதிகங்களில் செல்லரித்து ஒழிந்தவை போக இறைவன் திருவருளால் உலகிற்கு வேண்டுபவை மட்டும் வைக்கப் பெற்றவைகளில் திருஞானசம்பந்தர் பாடியவைகளை முதல் மூன்று திருமுறை களாகவும், திருநாவுக்கரசர் பாடியவைகளை அடுத்த மூன்று திருமுறைகளாகவும், சுந்தரர் பாடியவைகளை ஏழாவது திரு முறையாகவும் மொத்தம் ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட் டன. மாணிக்கவாசகர் அருளிச்செய்த திருவாசகமும், திருக் கோவையாரும் எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர், சேந்தனார் ஆகிய ஒன்ப தின்மர் அருளியவை ஒன்பதாம்திருமுறையாகவும் அமைக்கப் பட்டன. திருமூலர் திருமந்திரம் பத்தாவது திருமுறையாகச் செய்யப்பட்டது. திருவாலவாயுடையார், காரைக்காலம்மை யார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார் சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரதேவர், கல்லாடர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமான் அடிகள், அதிரா அடிகள்,

பட்டினத்துப்பிள்ளையார், நம்பியாண்டார் நம்பிகள் ஆகிய பன்னிருவர் அருளிச்செய்தவை பதினொன்றும் திருமுறையாகவும் வைக்கப்பட்டன. இந்த அமைப்பு ராஜ ராஜ சோழ மன்னனின் வேண்டுகோள்படி நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப் பெற்ற தமிழ்வேதமாயிற்று. மந்திரங்கள் பதினொன்ருகலின் (பஞ்சப்ரம்ம, ஷடங்க) திருமுறைகளும் பதினொன்ருயின.

பின்னர் பன்னிரண்டாம் நூற்ருண்டில் அநபாய சோழன் என்ற இரண்டாவது குலோத்துங்க சோழ மன்னனின் வேண்டுகோளின்படி அவ்வரசனின் முதன்மந்திரியாக விளங்கியதெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணம் என்று திருநாமம் சூட்டி அறுபான்மும்மை தனியடியார் வரலாறுகளை, ஒன்பது தொகையடியார் பற்றிய குறிப்பும் சேர்த்து, ஒருதனித் தமிழ்க் காவியமாக அருளிச் செய்தார். இது தற்சமயம் பெரியபுராணம் என்ற பெயரில் பிரசித்தமாக வழங்கப்பட்டு வருகிறது, 'தோடு செய்த திருநெறிய தமிழோடு இது ஒக்கும்' ஆதலால் இது பன்னிரண்டாம் திருமுறையாக அமைக்கப்பட்டு மன்னவனுல் செப்பேடு செய்விக்கப்பட்டது. அன்று முதல் திருமுறைகள் பன்னிரண்டாயின. இதன் பிறகு இவற்றிற்குப்பின் சேர்க்க ஏனைய நூல்கள் எவற்றுக்கும் இடமில்லாமல் ஆண்டவனே அமைத்தாற் போல முதல் திருமுறை, முதல்பாட்டு, முதல் அடி, முதல் சீரில் முதல் எழுத்தாக "த்+ஓ" எனத் தொடங்கிக் கடைசி திருமுறை, கடைசிப்பாடல், கடைசி அடி, கடைசி சீரில் கடைசியாக "ம்" என மகர ஒற்றுடன் முடிந்து பன்னிரண்டு திருமுறைகளும் ஓம் என்ற பிரணவத்தில் அடங்கின. திருமுறைகளின் இது போன்ற தெய்வத் தன்மையை உலகினில் வேறு எங்கும் காண இயலுமோ?

## இந்த வெளியீடு

பன்னிரண்டு திருமுறைகளில் மொத்தம் சுமார் 18300 திருப்பாடல்கள் உள்ளன. இவைகளில் 8237 திருப்பாடல்கள்

கொண்ட முதல் ஏழு திருமுறைகளாகிய தேவாரத் திருப்பதிகங்களையே நாம் இப்பொழுது **''மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை''** என்ற பெயரில் 108 பகுதிகளாக வெளியீடத் திருவருள் துணை கொண்டு முன் வந்துள்ளோம். இம் முயற்சி வெற்றியுடன் முடிந்த பின்னர் எஞ்சிய ஐந்து திருமுறைகளையும் அப்பொழுது நமது புத்தி, சக்தி, ஆயுள் முதலியவை அனுமதித்தால் இதே முறையில் வெளியிட வேண்டும் என்ற எண்ணமும் நமக்கு உண்டு. **''முன்னவனே முன்னின்ருல் முடியாததும் உளதோ''** நிச்சயம் முடியும் என்பது நமது துணிவு.

இந்த நூல் பகுதிகளை ஒவ்வொன்ருக விடாமல் பெற்றுத் தவருது அன்பர்கள் படித்துப் பயன் பெற வேண்டுகிருேம். இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி பயப்பது இதனை விட வேருென்றில்லை என்று திடமாக நம்பிப் படிப்பவர் சகல நன்மைகளும் பெறுவர். நம்பிஞர் கெடுவதில்லை; இது நான்கு மறை தீர்ப்பு என்ருர் மஹாகவி பாரதியார்.

## நூற்பெயர்

இந்த வெளியீடுகளின் தலைப்பாக நாம் கொண்டது தாயுமான சுவாமிகளின் திருவாக்கினின்றும் பிறந்த சொற்ருெடராகும். தேவார ஆசிரியர்களே பல இடங்களில் தமிழ் மாலை என்ற சொற்ருெடரைக் கையாண்டிருப்பதை அங்கங்கே கண்டு மகிழலாம். இறைவனுக்குச் சூட்டப்படும் மற்றைய மலர் மாலைகள் காலத்திஞல் வாடக்கூடியவை. ஆஞல் நாம் சூட்டும் இந்தத் ஞானத்தமிழ் மாலைகளோ எக்காலத்தும் வாடாது தெய்வ மணம் பரப்புபவை யாகும்.

## நாம் வேண்டும் பலன்

மலர் மாலைகள் இறைவன் திருமுடி மீது வீற்றிருக்கும் வரை அம்மாலைகளின் நாரும் இறைவன் முடி மீது இருப்பதைப் போலவே, மூவர் தமிழும் உலகில் உள்ளவரை அடியேனது உரைக்காரணத்தால் அடியேன் பெயரும் அடியார்கள் கருத்தில் நிலவி நிற்கும். இதுவே இம்மையில் நாம் விரும்பும்

பேறு. மறுமையில் பிறவாமை, திருவருளால் பிறக்க நேரிடினும் புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியனும் சிவபெருமானின் திருவடி மறக்காத சிந்தை வேண்டும். முக்கிய பயன் தவிர இடைப்பயனும் உண்டு என்பதால் இப்பதிப்புகளை வெற்றிகரமாய் முடிக்கத் தேவையான எளிய வசதிகள் கொண்ட சீரான வாழ்க்கை. இவற்றையே நாம் இறைவனிடம் வேண்டுகிறோம்.

## நமது வேண்டுகோள்

இந்த நமது முதல் தமிழ் மாலையைக் கண்ணுற நேரும் அன்பர்கள் இதனைப் புத்தகம் வாங்கும் வணிக விஷயமாகக் கருதாது ஞான பூஜையில் தாம் ஈடுபடுவதாக நினைத்து வாங்கவேண்டும். தமது நண்பர்களையும் ஈடுபடுத்த வேண்டும். உறவினர்களின் திருமணங்கள், மற்றும் சுப நிகழ்ச்சிகளில் இந்த 'ஞானத் தமிழ் மாலைகளைப்' பரிசளிக்க வேண்டும். மற்றும் ஒல்லும் வகையில் எல்லாம் உதவி நமது ஞான பூஜையை வெற்றிகரமாக முடித்துத் தரவேண்டும்.

## நாம் பெற்ற ஆசிகள்

நமது நன் முயற்சிக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் கருணை கூர்ந்து ஸ்ரீமுகம் அருளிச் செய்து ஆசீர்வதித்துள்ளார்கள். இன்று அகில உலகிலும் ஆன்மீக ஜோதியாய்த் திகழும் ஸ்ரீமத் ஆசார்யாளும் அவர்கள் திருவருள் வழி நின்று ஞானச் செங்கோல் செலுத்தும் ஸ்ரீ புதுப்பெரியவாள் ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளும் குரு—சிஷ்யன் என்ற வியாஜத்தில் உலகில் தோன்றியுள்ள சிவனும் ஸ்கந்தனுமே ஆவர் அன்றோ? அவர்கள் அமர்ந்திருக்கும் திசை நோக்கித் தண்டனிட்டு வணக்கம் செலுத்துகின்றேன்.

அடுத்து நம்பால் அருள் பூண்டவர்கள் இருபதாம் நூற்றாண்டின் இணையில்லாச் சித்தர் பெருமான் தவத்திரு காயத்திரி சுவாமிகள். புராண காலத்தில் கௌசிகரும், கௌத

மரும் அன்னை காயத்திரியின் மகத்துவத்தை அகில உலகும் அறியச் செய்தது போல, இந்த நவீன நாகரிக இயந்திர உலகத்தில் (Mechanical world) காயத்திரி மகாமந்திர மகிமையினை மக்களை உணரச் செய்து ஒரு சமய மறுமலர்ச்சி (Renaissance) யினையும் விழிப்பினையும் (Awakening) உண்டு பண்ணிவருகிறார்கள். இத்தகைய தெய்வப் பிறவியான தவத் திரு காயத்திரி சுவாமிகள், சிவபெருமான் அரி அயனுக்கு அரியராகி அடியவருக்கு எளியனும் தன்மை போல, பல பிரபுக்கள் அவர் அருளுக்கு ஏங்கி நிற்க ஒன்றுக்கும் பற்றில் லாத எளியவனான அடியேனிடம் வலியவந்து அருள் புரிந்து ஆண்டு கொண்டருளினார்கள். ஸ்ரீமுகமாகிய அருட் கொடை மட்டுமல்லாமல் பொருள் கொடையாக ரூ· 108/– வழங்கிப் பொருள் உதவியும் செய்துள்ளார்கள். இவர்களது பொன்னார் திருவடிகட்கு அடியேனின் வணக்கங்களைச் செலுத்துகிறேன்.

சைவமும் செந்தமிழும் சேர்ந்து புரந்திடும் திருத்தரும புரம் குருமஹாசந்நிதானம் அவர்களின் ஸ்ரீமுகம் அடியேனது தவக்குறைவினால் இன்னும் அருளப் பெற்றிலேன். அருள் கிடைத்ததும் அடுத்த தமிழ்மாலைப் பதிப்பில் அவர்களது ஆசியையும் பிரசுரம் செய்வேன் என்பதையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேன். மற்றுமுள்ள சன்னிதானங்களுக்கும் விண்ணப்பங்கள் அனுப்பி அவைகள் ஏற்றுக் கொள்ளப் பட்டு ஆசிகள் வழங்கப்பட்டால் அவ்வப்போது அவ்வாசிச் செய்திகளும் பிரசுரிக்கப்படும்.

## நூலின் அமைப்பு

தேவாரத்திருப்பதிகங்களை பண்முறையாகவும், தல முறையாகவும் இதுவரை வெளியிட்டுள்ளனர். இவ்விரண்டு முறையே யல்லாது நாம் நமது வெளியீட்டில் ஆசாரியர்கள் தலயாத்திரைச் சென்று பாடிய முறையில் பதிகங்களை வெளி யிட உறுதி பூண்டுள்ளோம். ஆயினும் இந்தமுதல் வெளியீடு அச்சாகிய பிறகே இந்த எண்ணம் தோன்றியபடியால்

அடுத்த பகுதியிலிருந்து தலயாத்திரை முறை பின்பற்றப் படும். இந்த முறையில் வெளியிடுவதால் பதிகவரலாற்றுத் தொடர்ச்சி ஆசாரியரது சரிதத் தொடர்ச்சியாகவே அமைந்து விடும்.

திருப்பதிகங்கள் பாடப்பட்ட தலமகிமைகளையும் சுருக்க மாகக் கொடுத்துள்ளோம். இயன்றவரை படங்களும் பிரசுரித் துள்ளோம். தலங்களைப் பற்றிய செய்திகள் இன்னும் தேவை யான அளவு அவ்வப்போது தக்க இடங்களில் கொடுக்கப் படும். பாடல்களில் அடங்கியுள்ள புராண வரலாறுகள், சித்தாந்தக் கருத்துக்கள், இலக்கிய நயங்கள் ஆகியவை களும் உரிய இடங்களில் விளக்கிக் காட்டப்பட்டு இப்பதிப் புக்களை மிகவும் பயனுள்ளவைகளாகச் செய்ய வேண்டும் என்பது எமது ஆசை. எந்த அளவுக்கு அது நிறைவேறு கிறது என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போமாக.

## சித்தாந்த வித்தகர்

சைவசித்தாந்தத்தின் முதுபெரும் வித்தகர், திருமுறை களே பேச்சும் மூச்சுமாக விளங்கும் பெரியார் என்னை ஆப்த நண்பனுகக் கொண்டவர் உயர்திரு கயப்பாக்கம் சோமஸுந் தரம் செட்டியார் அவர்கள். சில ஆண்டுகளுக்கு முன்னர் அவர்களது உதவியுடன் **ஸகல காரிய சித்தியும் சைவத் திரு முறைகளும்** என்ற நூலைப் பதிப்பித்து Little Flower Co மூலம் வெளியிட்டோம். அப்பெரியாரது உதவியும் யோசனை களும் இப்பதிப்புகளுக்கும் கிடைத்து அன்பர்கட்கும் பயன ளிக்கும் என்று உறுதி கூறுகிறேம். அவர்களது ஆதரவுக்கு மனமார்ந்த நன்றியறிதலைத் செலுத்துகிறேம்.

## நறுமணம் பரப்பும் சிறுமலர் நிறுவனம்

**'சிறுமலர் நிறுவனம்'** என்று பொருள் படும் பெயர் கொண்ட Little Flower Co, Madras-17 நமது திருமுறை நூலினை முன்னர் மிகச் சிறப்பான முறையில் பதிப்பித்தார்கள். **'மூலையில் கிடந்தாரை முற்றத்தில் விட்டவர்'** என்பது போல

அடியேனைத் திருமுறை உரையாசிரியனாகச் செய்த பெருமை அவர்களையே சாரும். அப்பொழுது நான் மேற்கொண்ட முயற்சிகளும் ஆராய்ச்சிகளும் இப்பொழுது பெரிதும் பயன் படுகின்றன. இப்பெரும் பணியில் யான் ஈடுபடக் காரணமாய் அமைந்த அந்த நிறுவனத்தாருக்கும், அதன் நிறுவனரும் இன்றைய கௌரவ ஆலோசகருமான ஸ்ரீ சடாரிசேவக, ஸ்ரீ ஹயக்ரீவ ஸேவாரத்னம், பக்திப்ரசாரண ப்ரவீண ஸ்ரீமான் வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா அவர்கட்கும் நான் பெரிதும் கடமைப்பட்டவனாகின்றேன். நிறுவன மானேஜர் ஸ்வதர்ம நிரத, சிஷ்டப்ரேஷ்ட, ஸகலகலாகுசல, செந்நெறிச் செம்மல், ஸ்ரீ ஹயக்ரீவதாஸன் குரேறு V. வேங்கடேச ஐயர் அவர் களுக்கும், ஸ்தாபகரின் குமாரரும் பார்ட்னருமாகிய திருமலை நல்லான் சக்கரவர்த்தி வரதன் அவர்கட்கும் இந்தத் தரு ணத்தில் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த எமது புதிய முயற்சிக்கு மேற்படி ஸ்தாபனத்தாரின் பரி பூரண உதவி ஒல்லும் வகையில் எல்லாம் கிடைக்கும் என நம்புகிறேன்.

## ஈசன் அருள்

மனித முயற்சிகள் யாவற்றிற்கும் மேம்பட்டது ஈசன் அருள். அது இருந்தால் மட்டும்தான் நமது முயற்சிகள் பலன் கொடுக்கும். எனவே எனது இதயக் கமலத்தில் அம்மையப்பனை இருத்தி இம்முயற்சி வெற்றி பெறப் பிரார்த் தித்துக் கொள்கிறேன்.

## நன்றியுரை

இந்த வெளியிட்டிற்கு முன்பண உதவி செய்துள்ள, செய் வதாக வாக்களித்துள்ள பிரமுகர்களுக்கு எனது நன்றிகள். அவர்களது பெயரை அடுத்த மாலையில் பிரசுரிக்கிறேன். தல மகிமைக்குத் தேவையான புகைப்படங்களை வழங்கியும், இனி யும் வழங்க உறுதி கூறியுமுள்ள திருவாதிரையான் திருவருட் சபையின் செயலாளர் சிவசிந்தனைச் செல்வர் திரு V. சேகர்

அவர்களுக்குத் திருவருள் என்றும் எங்கும் துணை நிற்க என வாழ்த்தி நன்றி கூறுகிறேன்.

மிக அழகிய முறையில் நமது இந்தத் திருமுறை வெளியீடுகளுக்கு அட்டைப்படம் அமைத்துக் கொடுத்த கவிஞர் ஓவியர் திரு மயன் அவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இன்னும் ஏதேனும் கூறவேண்டியிருப்பின் அவ்வப்பொழுது தமிழ் மாலை வெளியீடுகளின் போது கூறுவேன்.

ஆழ்க தீயது; எல்லாம் அரன் நாமமே
சூழ்க; வையகமும் துயர் தீர்கவே.

சென்னை-600 033 இங்ஙனம்

18—12—1977 சங்கரன் அடிமை

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

உரையாசிரியர்-பதிப்பாசிரியர்

---

**ஆசிரியர் குறிப்பு:** கௌண்டின்ய கோத்திரத்தில் உதித்துக் கவுணியன் எனப் பெயர் பெற்ற திருஞானசம்பந்தரின் பதிகத்தினை முதலாகக் கொண்ட இத்திருமுறை வெளியீட்டுக்கு அதே கௌண்டின்ய கோத்திரத்தில் உதித்தவரான தவத்திரு காயத்திரி சுவாமிகள் ஸ்ரீமுகம் வழங்கியிருப்பதும் ஒரு சிறப்புப் பொருத்தமே என்பதைக் குறிப்பிட விரும்புகிறோம்.

---



சிவமயம்



# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை

சாஸ்த்ரப்ரசாரபூஷணம், சங்கரனடிமை,
சிவபுராண ஞானபூஜகர்,
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா அவர்களால்
தொகுத்து இயற்றப்பட்ட பதிகவரலாறு,
பொழிப்புரையுடன் கூடியது.

## 1. திருஞானசம்பந்தர் அருளியவை

### திருப்பிரமபுரம்

பண் : நட்டபாடை] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடையேறியோர்
தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென்
னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந்
தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 1

முற்றலாமையிள ஙாகமோடேன
முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னுப்பலிதேர்ந்தென
துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல்
கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 2

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர்
நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளை சோரவென்
னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய
வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி
விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென
துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை
மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே 4

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை
யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென
துள்ளங்கவர்கள்வன்

கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர்
காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே 5

மறைகலந்தவொலி பாடலோடாடல
ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென்
னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழினீடுயர்
சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 6

சடைமுயங்குபுன லன்னனலன்னெரி
விசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென
துள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம்
பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 7

வியரிலங்குவரை யுந்தியதோள்களை
வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென
துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலவூழிகள்
தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 8

தாணுதல்செய்திறை காணியமாலொடு
தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யங்nிமிர்ந்தானென
துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளிர்முதலாகிய
வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 9

புத்தரோடுபொறி யில்சமணும்புறங்
கூறநெறிநில்லா
ஒத்தசொல்லஉல கம்பலிதேர்ந்தென
துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரி போர்த்ததோர்
மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே. 10

அருநெறியமறை வல்லமுனியகன்
பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய
பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம்
பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை
தீர்தலெளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர் : பிரமபுரீசுவரர்
தோணியப்பர்

தேவி : திருநிலைநாயகி
பெரியநாயகி

பதிக வரலாறு :—சீகாழியிலே கவுணியர் கோத்திரத்தில் சிவதீக்ஷைபெற்ற வேதியரான சிவபாதவிருதயருக்கும் அவரது கற்பிற் சிறந்த மனைவியார் பகவதி அம்மையாருக்கும் வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க, பூதபரம் பரை பொலியத் தோன்றியவர் திருஞானசம்பந்தர். இவரது அவதார தினம் சித்திரை மாதத்துத் திருவாதிரை நன்னாள். மூன்றாண்டுக் குழந்தையாக இவர் இருக்கும் பொழுது ஒரு நாள் சிவபாதவிருதயர் வழக்கம் போல் பிரமதீர்த்தத்தில் நீராடச் சென்றார். குழந்தையும் எவ்வளவு தடுத்தும் கேளாது உடன் சென்றது. தந்தையார் குழந்தையைக் குளக்கரையில் உட்காரவைத்து நீரில் மூழ்கி விரைவில் ஸ்நானம் செய்த பின்னர் 'அகமர்ஷணம்' என்னும் தருப்பணங்கருதி அம் மந்திர ஜபத்துடன் மீண்டும் நீரில் மூழ்கினார். அங்ஙனம் அவர் நீருள் மூழ்கியதும் தந்தையைக் காணாது குழந்தை தனித்திரார் என்ற காரணத்தால் திருவருள் பெறவேண்டிய காலம் வந்தடைந்தமையால் இவ்வுலகமனைத்திற்கும் தாய் தந்தையராகிய அம்மையப்பரை "அம்மே! அப்பா!!" என்று அழைத்தபடி திருத்தோணிபுரத்துச் சிகரம் பார்த்துப் பொருமி அழலானார். இவ்வழுகை ஒலி அம்மையப்பர் திருச் செவியில் சென்றடைந்தவுடன் அவர்க்கருள் புரிவான் வேண்டிப் பாகம் பிரியாப் பெருமாட்டியுடன் விடைமேல் எழுந்தருளினார். தமது திருவடிகளையே பேணி நிற்கும் திருப் பெருகும் சிவஞானத்தையருளத் திருவுளங்கொண்டு பெரிய நாயகியாரை நோக்கி உன்னுடைய திருமுலைப்பாலை பொற் கிண்ணத்தில் கறந்து இக்குழந்தைக்கு ஊட்டுக எனப்பணித் தருளினார். சிவபெருமானது அருளே வடிவமான தேவி யாரும் அங்ஙனமே அழுகின்ற பிள்ளையை அணைத்து தமது திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் கறந்து எண்ணுதற் கரிய சிவஞானத்தைப் பாலுடனே குழைத்துப் பிள்ளையின் அழுகைதீர்த்து இப்பாலினை உண்பாயாக என்று உண்பித் தருளினார். இங்ஙனம் எல்லா உலகுக்கும் உயிர்க்கூட்டத் துக்கும் தாய் தந்தையாக விளங்கும் உமாதேவியாராலும்

சிவபெருமானாலும் ஆட்கொள்ளப்பட்டதனாலே ஆளுடைய பிள்ளையார் எனவும் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் தெளிவதற்கரிய பொருளாகிய சிவஞானத்தோடு சம்பந்தம் பெற்றமையால் திருஞானசம்பந்தர் எனவும் அழைக்கப் பெறுவாராயினர்.

ஜபம் முடித்து நீரினின்றும் வெளிவந்து கரைசேர்ந்த சிவபாதவிருதயர் குழந்தை பால்உண்ட அடையாளங்களைக் கண்டு ஒரு சிறு கோலினை எடுத்து ஓங்கி யார்தந்த பாலமுதினை உண்டாய்? எனக் கோபித்து எச்சில் மயங்கிட உனக்கு இது இட்டாரைக் காண்பி என வினவினர். உவமையிலாக் கலைஞானமும், உணர்வரிய மெய்ஞ்ஞானமும் பெற்று பேருணர்வோடு விளங்குகின்ற பிள்ளையார் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் சொரிய உச்சியின் மேல் எடுத்த திருக்கரத்தின் ஒரு விரலாலே சுட்டி விண்ணிறைந்த பேரொளியோடு விளங்குகின்ற இடபத்தின் மேல் அம்மையோடு எழுந்தருளா நின்ற தோணியப்பரைக் காட்டினர். தம் உள்ளே நிறைந்து வழிந்த உயர்ந்த ஞானத்திருமொழியினல் அளவில்லாத வேதங்களின் முதலெழுந்தாகிய பிரணவத்தைத் 'த'கர மெய்யுடன் சேர்த்து எழுதாமறையாகிய வேதத்தை எழுதுமறையாகத் தமிழ் மொழியினல் யாவர்க்கும் இன்பம் பெருகும்படி தமது திருப் பாடல் சிவபெருமானுடைய திருச்செவியைச் சென்று சார முதலில் அச்செவியினைச் சிறப்பித்து "தோடுடைய செவியன்" என்று எடுத்த மெய்ம் மொழித் திருப்பதிகத்தினை ஓதி அருளினர். இத்திருப்பதிகம் தனக்குப் பால் கொடுத்த அம்மையப்பரை அடையாளங்களுடனே கூறி "எம்மை இது செய்த பிரான் இவனே" என்று தந்தையார்க்கு காட்டுமுகத்தால் உலகத்தவர் அனைவர்க்கும் இறைவரைச் சுட்டிக்காட்டி அருளிய அருமையும் பெருமையும் வாய்ந்த முதல் திருப் பதிகமாகும்.

**பதிகச் சிறப்பு** :—இத்திருப்பதிகம் சொல்லாலும், பொருளாலும் மிக அழகும், பெருமையும் வாய்ந்தது. பிரணவத்தின் முதலாகிய ஓங்காரத்தை சிவசக்தியின் ஸ்வரூபமாகிய

தகர வித்தையைக் குறிக்கும் 'த்'என்னும் மெய்யுடன் சேர்த்து 'தோ' என்று தொடங்கிய சிறப்புடன் தேவாரம் வேதமே என்பதையும் உணர்த்தும் வகையில் வேதம் பயின்ற அந்தணர் குலத்தில் பிறந்த பிள்ளையார் தாம் தந்த இத்தமிழ் வேதத்தில் காயத்திரி மந்திரத்தின் முதலெழுத்தாகிய 'த'கரத் தின் மீது பிரணவத்தின் முதலெழுத்தாகிய ஓகாரத்தை சேர்த்து 'தோ' என்று தொடங்கியுள்ளார்கள் என்பதும் கருதற்பாலது. விரிவஞ்சி இன்னும் பல சிறப்புகளையும் விடுத் தனம். தக்கார்பால் கேட்டு மகிழ்க என்று வேண்டுகின்றனம்.

பதிகப் பொருளமைதி ;—இனி இப்பதிகத்தின் பொரு ளமைதியினைக் காண்போமாக. திருஞானசம்பந்தர் தாம் பாடிய முதல் திருப்பதிகத்தினுள் இறைவனைத்தக்க அடை யாளங்களுடன் முதல் ஏழு பாடல்களில் பாடியபின் எட்டா வது திருப்பாடலில் மண்ணுலகில் வாழ்பவர்கள் பிழை செய்தாலும் கண்ணுநற்கடவுளை சரணடைந்தால் அவர் பெரும் கருணை காட்டி ஆட்கொண்டு அருள் புரிவார் என் பதை விளக்கும் பொருட்டுச் சிவபெருமானை மதியாது இராவணன் கயிலாய பருவதத்தை எடுத்து அதனால் உடல் முறிந்து பின்னர்த் தன் பிழையினை உணர்ந்து சாமகீதம் பாட அதனல் மகிழ்ந்து அவனுக்கு அருளிய திறத்தை வைத்துப் பாடினார். ஒன்பதாவது திருப்பாடலில், சிவபெருமான் தம்மை வந்து அன்போடு பணிந்து தொழுபவர்க்கே அருள் புரிவார் என அறிந்து அவரை வணங்காது மயக்கமடைந்த மனத் தினராகிய திருமால், நான்முகன் ஆகிய இருவரும் மிக இழி வான பன்றி, அன்னப்பறவை ஆகியவற்றின் வடிவங்களை எடுத்துக் கொண்டு கீழும் மேலும் தேடியும் இறைவனை அடைய முடியாதவர்களாகி மிகவும் துன்புற்று பின்னர் அறிவு வந்து திருவைந்தெழுத்தினைத் துதித்து பேறடைந்த திறத் தினை விளக்கினார். வேத காரணராகிய வெண்பிறையும், செஞ்சடைகளையும் கொண்ட சிவபிரானாரை அடையும் சைவ நெறியை அடைந்து கடைத்தேருத புறச்சமயத்தவராகிய சமணரும், புத்தரும் ஆகியோர்களின் நெறிகள் பழியை உண்

டாக்கும் கெடு நெறிகளே ஆவன என்னும் உண்மையை பத்தாவது திருப்பாடலில் அமைத்தருளினர். பின்னர் பதி ஞென்ருவது திருப்பாடலினல் திருப்பதிகத்தினை முடித்து திருக்கடைக் காப்பாகச் சாற்றி அருளினர். இத்திருக்கடைக் காப்பு பாடலில் அப்பதிகத்தை ஓதுவதனல் உண்டாகும் பெரும் பயனையும் குறித்தருளினர்.

திருஞானசம்பந்தருடைய மற்ற எல்லாத் திருப்பதிகங் களிலும் இத்தகைய அமைப்பையே காணலாம். இம் முதல் திருப்பதிகத்திற்கு பிள்ளையார் அருளிச் செய்த பலன் ''தொல் வினை தீர்தல்'' என்பதாகும். தொல்வினைகள் தீர்ந்தால் பிறவி யும் நீங்கும். பிறவி நீங்கப் பேரின்பம் கிட்டும். எனவே, இப் பதிகத்தினல் அடையும் பெரும்பயன் பிறப்பிறப்பில்லாத பேரின்ப நிலையடைதலாகும்.

**பதிகப் பொழிப்புரை :**

1. தோடு அணிந்த திருச்செவியுடையவனுய் இடப வாகனத்தின் மீது அமர்ந்து ஒப்பற்ற தூய்மையான வெண் ணிறமுடைய சந்திரனைச் சிரத்திலே அணிந்து கொண்டு சுடுகாட்டுச் சாம்பலைத் தன் மேனி முழுவதும் தரித்துக் கொண்டு, என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) தாமரை மலரிற்ருேன்றிய பிரமதேவன் முற் காலத்தில் இறைவனைப் பணிந்து வழிபட்டதனல் அவனுக்கு அருள் செய்த பெருமையுடைய திருப்பிரமபுரம் என்னும் சீகாழிப்பதியில் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற பெருமாஞ கிய இவனே யாம்.

2. முற்றிய ஆமை ஓடு, இளமையான நாகம், பன்றியின் கூரிய கொம்பு ஆகியவைகளை அணிகலன்களாகக் கொண்டு தசை உலர்ந்துபோன பிரம கபாலத்தைத் தனது பலி பாத்திரமாகக் கையிற்றரித்து அதில் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) கற்றலும் கேட்டலுமுடைய பெரியோர்கள் தங்கள் கரங்களால்

தன் கழல்களை வணங்கிப் போற்ற விடையின் மேல் ஏறி அருள் செய்த திருப்பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவனே யாம்.

3. கங்கைநதி தங்கி நிற்கின்ற நீண்ட சடையின்மேல் ஒப்பற்ற வெண்மையொளி பொருந்திய சந்திரனைச் சிரத்தில் அணிந்து அழகு மிக்கதாக அடுக்கப்பட்ட கைவளையல்கள் கழன்று விழும்படியாக என் உள்ளத்தைக் கொள்ளை கொண் டவன் (யாவனெனில்) பதிகள் பல நிறைந்த இப்பார் மீது ஒப்பற்ற பதி இது என்று சொல்லும்படி மிக்க புகழ் பெற்ற இத்திருப்பிரமபுரத்தில் விரும்பியுறைகின்ற பெருமானாகிய இவனே யாம்.

4. ஆகாயத்தில் செருக்குடன் திரிந்த மும்மதில்களையும் எரித்தது மட்டுமன்றி பிரமனது மண்டையோட்டிலே மன மகிழ்ச்சியுடன் பலியேற்க வந்து எனது சித்தத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) புற்றுக்குள் வசித்தலை விரும்புகின்ற பாம்பும், கொன்றை மலரும் நிறைந்து விளங்கும் மார்பில் இடப் பாகத்தில் உமா தேவியாரை வைத்து மகிழ்ந்த இத்திருப்பிரமபுரத்தில் விரும்பி உறையும் பெருமானாகிய, இவனே ஆகும்.

5. ஒரு பாகத்தில் பெண்ணை உடையவன், சடைமுடி யான், எருதின் மீது ஏறி பவனி வருபவன் இவன் என்று யாவ ராலும் துதிக்கப்பட அதன் மீது அமர்ந்து எனது உள்ளத் தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) கருமை நிறம் கொண்ட கடலால் ஒரு காலத்தில் உலகமெல்லாம் கவரப் பெற்றிருந்தபோது இது ஒரு தோணியாகி மிதந்தது என்னும் புகழ் பெற்ற இத்திருப்பிரமபுரத்திலே விரும்பி உறை யும் பெருமானாகிய இவனே ஆகும்.

6. ஒலி வடிவாகிய வேதங்களைப் பாடுதலை உடையவரா யிருப்பதுடன் திருக்கூத்தினையும் உடையவராய் மழுவேந்தி என் முன்கையில் கூட்டமாகப் பொருந்தியிருக்கின்ற சங்கு வளையல்கள் ஒவ்வொன்றுகக் கழன்று போகுமாறு என்

உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட கள்வன் (யாவனெனில்) இருள் நிறைந்ததும் மணம் மிகுந்ததுமான பொழில்களிடத்தும், நீண்டு உயர்ந்த சோலைகளிடத்தும் ஒளிக் கிரணங்கள் சிந்துமாறு சந்திரன் தவழ்கின்ற இத்திருப்பிரமபுரத்திலே விரும்பி உறைகின்ற பெருமானாகிய இவனே ஆகும்.

7. சடையிலே கலந்த கங்கையை உடையவன், கையினில் ஏந்திய தீ உடையவன் அத்தீ வீசி அதனால் பெருமை அடைய, ஆடையின் மேல் இறுகக்கட்டிய கச்சையாகிய பாம்போடு திரிந்து எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன் (யாவனெனில்) கடலோடு கலக்கின்ற உப்பங் கழிகள் சூழ்ந்த குளிர்ந்த சோலைகளில் அழகிய பொன்னிறம் பொருந்திய சிறகுகளை உடைய அன்னங்கள் தங்கள் பெடைகளைத் தழுவுகின்ற இத்திருப்பிரமபுரம் மேவிய பெருமானாகிய இவனே ஆகும்.

8. திருக்கயிலாயமலையைப் பெயர்த்தெடுக்க வியர்வை கூடிய தோள்களால் வீரத்தன்மை காட்டுவித்த அரக்கனாகிய இராவணனுடைய ஆற்றலை அழித்து எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) துன்பங்கள் மிக்க இவ்வுலகில் பல ஊழிகள் (பிரளய வெள்ளங்கள்) தோன்றும் பொழுதெல்லாம் ஏனைய உலகம் யாவும் அழிய தான் அழியாது ஒவ்வொரு பெயருடன் புகழுடன் விளங்கா நின்ற இத்திருப்பிரமபுரத்திலே மேவி இருக்கின்ற பெருமானாகிய இவனேயாகும்.

9. திருமாலும், பிரமதேவனும் முறையே திருவடியையும் திருமுடியையும் தமது குறிக்கோளாகக் கருதி இறைவனைக் காணுமாறு பேருரு எடுத்துத் தேடியும் காணாது அவர்கள் தோல்வியுறச் சோதிவுருவாய் வெளிப்பட்டு நின்றவனாகிய எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) ஒளி வீசும் நெற்றியையுடைய பெண்களும் மற்றும் உலகத்தவரும் வணங்க அவர்களைக் காத்தருளுகின்ற இத்

திருப்பிரமபுரத்தில் விரும்பி உறைகின்ற பெருமானுகிய இவனே யாகும்.

10. புத்தரும், அறிவில்லாச் சமணரும் பழித்துரைக்க வேத நன்னெறியில் நில்லாத உலகத்தவர்கள் அப்பழிக் கூற்றுக்கு ஏற்றவாறு தமக்கு தோன்றியவற்றைச் சொல்லவும் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வன் (யாவனெனில்) "இது வியப்பாகிய ஓர் மாயம்" என்னும்படியாக மதம் பொருந்திய யானை வருந்த அதன் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவரும் பித்தர் போன்ற வருமான திருப்பிரமபுரத்தில் மேவியிருக்கிற பெருமானுகிய இவனே யாகும்.

11. அரிய சொற்களை வகுக்கின்ற வேதங்களில் வல்லவனுகிய பிரமனுல் இறைவர் பூசையின் பொருட்டு உண்டாக்கப்பட்ட தாமரை மலர்கள் நிறைந்த விசாலமான பிரம தீர்த்தம் என்னும் தடாகத்தினையுடைய முத்திநெறியையுடைய திருப்பிரமபுரம் என்னும் இப்பதியில் மேவிய பெருமானுகிய இவனை ஒருமைப்பட்ட மனத்துடன் உணர்ந்த திருஞான சம்பந்தன் பாடிய சிவநெறி காட்டுகின்ற **இத்தமிழ்த் திருப் பதிகம் ஓதவல்லவர்கள் தங்களுடைய பழவினைகளைப் போக்கிக் கொள்ளுதல் மிக எளிதான காரியமாகும்.**



—சிவம்—

## (ஆ) திருக்கோலக்கா

பண் : தக்கராகம்] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையும் கொண்ட உருவ மென்கொலோ 1

பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை உலகம் உய்யவே. 2

பூணற் பொறிகொள் அரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே. 3

தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசேர் அங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே. 4

மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய எரித்த எந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே. 5

வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்

கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே. 6

நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் பக்கல் துயர மில்லையே. 7

எறியார் கடல்சூழ் இலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே. 8

நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றான் பாதம் ஏத்தி வாழ்மினே. 9

பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே. 10

நலங்கொள் காழி ஞானசம் பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர்-சத்தபுரீசுவரர் தேவி-ஓசைகொடுத்தநாயகி

**பதிகவரலாறு:**—திருஞானசம்பந்தர் அம்மை திருமுலைப் பால் உண்ட மறுநாள் இத்தலத்துக்கு தந்தையோடும் தொண்டர்களோடும் எழுந்தருளினார். திருக்கோயிலை வலம் வந்த பிறகு இறைவன் திருமுன்பு நின்று 'மடையில் வாளை பாய' எனத் தொடங்கும் இத்திருப்பதிகத்தினை திருக்கரங் களினால் தாளமிட்டுப் பாடினார். அப்போது இறைவர் திரு வருளால் "திருவைந்தெழுத்து" எழுதப் பெற்ற அழகிய பொன்னினால் ஆன திருத்தாளங்கள் ஞானசம்பந்தப் பிள்ளை யாரது கரங்களில் வந்தன. திருவருளைத் தொழுது போற்றி அத்தாளங்களைக் கொண்டு தாளமிட்டுப் பதிகத்தினைத் தக்க திருக்கடைக்காப்புடன் பாடி முடித்தார். பிறகு அனைவரும் சீகாழிக்குத் திரும்பினர். இத்தலத்துக்கு இம்முறை எழுந் தருளியது திருஞானசம்பந்தரது முதலாவது தலயாத்திரை யாகக் குறிப்பிடப்படுகிறது.

**பதிகப் பொழிப்புரை :—**

1. வாளைமீன்கள் துள்ளும்படி மாதர்கள் நீராடும் பொய்கையை உடைய திருக்கோலக்காவிலுள்ள சிவபெரு மான் தலையிலே சடையும் பிறையும் தாங்கி சாம்பலைப் பூசி கோவண உடையும் கொண்ட உருவத்தினைக் கொண்டது எதன்பொருட்டோ ?

2. பெண் ஒரு பாகமாகவும் பிறையினைச் சென்னியிலே கொண்டவனாகவும் கோலக்காவினைக் கோயிலாகக் கொண்ட இறைவன் தனது பாதங்களை எல்லோரும் கைகளால் கூப்பித் தொழ இவ்வுலகம் உய்ய நஞ்சினை உண்டருளினான்.

3. படங்கொண்ட பாம்பினை பூணாகவும் சடைமீது பிறையினை அணிந்தவனுமான மறைவல்லவனான கோலக் காவில் வீற்றிருக்கும் குழகனை (இளமையுடையவன்) மனத் துள் மாட்சிமை மிக இடைவிடாது தியானிக்கப் பிணிக ளெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறையும்.

4, இறுகத்தழுவிக் கொண்டிருக்கும் பாவங்கள் தளர வேண்டும் மக்களே! மழுப்படையுடையவனும் செல்வனும், மானினை ஏந்தினவனும் கூட்டமாக உள்ள பூதப்படையை உடையவனுமான கோலக்காவில் வீற்றிருக்கும் இறைவனை சிறிதும் தவருது தொழுது வாழுங்கள் (பாவங்கள் தளர இறைவனைத் தொழ வேண்டும் என்றபடி)

5 மயில் போன்ற சாயல் உடைய உமாபிராட்டியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும் திரிபுரங்களும் விழும்படி எரித்த எமது தந்தையும் ஆன சிவபிரான் எழுந்தருளியுள்ள குயில் நிறைந்த சோலைகள் கொண்ட கோலக்காவினைப் பயில அதாவது இடைவிடாது நினைக்கப் பாவங்களெல்லாம் அகலும்.

6. பலவாகப் பெருகுகின்ற வினைகளெல்லாம் கெட விரும்பும் மக்களே! கொன்றை மலர் சூடிய சென்னியினை உடையவனும் திருவிழாக்கள் பொருந்திய கோலக்காவில் வீற்றிருப்பவனுமான சிவபெருமானின் திருவடிகளைச் சரணமடைந்து வாழுங்கள்.

7. நீலவண்டினங்கள் நிறைந்த நிழல் பொருந்திய சோலைகளை உடைய திருக்கோலக்காவில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய வீரக்கழல் பொருந்திய சேவடிகளை கையினுல் தொழுவார்க்கு அவருடைய சமீபத்திலுங்கூட துயரம் இல்லாமல் போகும்.

8. கரையோடு மோதுகின்ற கடல்சூழ்ந்த இலங்கைக் கோனுன இராவணனை அவனது இருபது தோள்களையும் நெறித்த மூர்த்தியினுடைய திருவடிகளை அவன் இன்னிசையுடன் தொழுதான். அத்தகைய பெருமான் வீற்றிருக்கும் கோலக்காவை விதிப்படி வணங்கித் தொழுகின்றவர்களுடைய வினைகள் தாமே அகன்று விடும்.

9. நறுமணம் பொருந்திய தாமரை மலர் மேல் அமர்ந்த பிரம்மதேவனும் ஆற்றலுடைய ஆதிசேடனுகிய பாம்பணையில்

துயிலும் திருமாலும் காணுத பெருமானும் கூற்றமுதைத்த குழகனும் திருக்கோலக்காவில் உறைபவனும் இடபத்தை வாகனமாகக் கொண்டவனுமான சிவபெருமானுடைய பாதங்களைத் தொழுது வாழுங்கள்.

10. அழுக்குகளைக் கழுவாது திரியும் சமணர்களும், காவியாடையால் தங்களது உருவத்தை மறைத்த புத்தர்கள் ஆகிய இருவரும் பழுதுபட்ட சமய நெறியினை உடையவர்கள் இவர்களுடைய நெறியினைக் கொள்ளாத பெரியோர்கள் (சிவ நெறியாளர்கள்) நிறைந்த திருக்கோலக்காவைத் தொழப் பாவங்கள் மறைந்து விடும்.

11. நலங்கள் நிறைந்த சீகாழியில் உதித்த ஞான சம்பந்தன் திருக்கோலக்காவுளானைப் பாடிய திருவருளாகிய வலிமையைக் கொண்ட பாடல்களைப் பாடவல்லவர்கள் மலை போன்ற தமது வல்வினையாவும் போகும்படி உயர்ந்து வாழ்வார்கள். [இப்பதிகத்தின் பயனும் வினை கெடுதலாகும்]

சிவம்

---

## திருஞானசம்பந்தர் தேவாரச் சிறப்பு

புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்த ஞர்தலை தத்தெனத் தத்துமே
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே
கதவு மாமறைக் காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே
பழைய என்புபொற் பாவைய தாக்குமே
சினவ ராவிடம் தீரெனத் தீருமே
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

---

## (இ) திருநெடுங்களம்

பண்—பழந்தக்கராகம்] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மறையுடையாய் தோலுடையாய்
வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே
யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றமோராய்
கொள்கையினு லுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 1

கனைத்தெழுந்த வெண்டிரைசூழ்
கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த
திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல்
பேணியிராப் பகலும்
நினைத்தெழுவா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 2

நின்னடியே வழிபடுவான்
நிமலாநினைக் கருத
என்னடியா னுயிரைவவ்வே
லென்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும்
பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 3

மலைப்புரிந்த மன்னவன்றன்
மகளையோர்பான் மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கு
மவிர்சடையா ரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய்
தலைவநின்ற ணிழற்கீழ்
நிலைபுரிந்தா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 4

பாங்கினல்லார் படிமஞ்செய்வார்
பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு
தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பினோடுந்
தலைவநின்ற ணிழற்கீழ்
நீங்கிநில்லா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 5

விருத்தனாகிப் பாலனாகி
வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக்
கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தனாய வாதிதேவ
னடியிணையே பரவும்
நிருத்தர்கீத ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 6

கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக்
கூட்டியோர்வெங் கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த
மன்னவனே கொடிமேல்

ஏறுகொண்டாய் சாந்தமீதென்று
எம்பெருமா னணிந்த
நீறுகொண்டா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 7

குன்றினுச்சி மேல்விளங்குங்
கொடிமதில்சூ ழிலங்கை
அன்றிநின்ற வரக்கர்கோனை
யருவரைக்கீ ழடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா
லேத்தியிராப் பகலும்
நின்றுநைவா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 8

வேழவெண்கொம் பொசித்தமாலும்
விளங்கியநான் முகனுஞ்
சூழவெங்கு நேடவாங்கோர்
சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான்
கேடிலாப்பொன் னடியின்
நீழல்வாழ்வாரிடர் களையாய்
நெடுங்களம்மே யவனே. 9

வெஞ்சொற்றஞ்சொல் லாக்கிநின்ற
வேடமிலாச் சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந்
தத்துவமொன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால்
தோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பா ரிடர்களையாய்
நெடுங்களம்மே யவனே. 10

நீடவல்ல வார்சடையான்
மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழு மாமறுகிற்
சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை
ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார்
பாவம்ப றையுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர்: நித்யசுந்தரர் தேவி: ஒப்பிலாநாயகி

பதிகவரலாறு:—திருப்பாற்றுறை, திருவெறும்பியூர்த்திருமலை முதலிய தலங்களை வணங்கிய பின்னர் திருஞானசம்பந்தப் பெருமான் திருநெடுங்களத்தையடைந்து இறைவனையன்பால் "நின்பால் நேசம் செலாவகைத் தடுக்கும் இடும்பை தீர்த்தருள்வாய்" என்னுமிப் பதிகத்தைப் பாடியருளினர். ஒவ்வொரு திருப்பாடலிலும் 'இடர்களையாய்" என்ற குறிப்பு வந்துள்ளது கவனிக்கத்தக்கது. இதுபற்றியே இடர்களையுந் திருப்பதிகமாகப் பெரியோர்களால் கொள்ளப்படுவது.

பதிகப்பொழிப்புரை:-1. வேதங்களையுடையவனே! தோலை உடையாகக் கொண்டவனே! நீண்டசடையின்மேல் வளர்கின்ற பிறைச் சந்திரனையுடையவனே! தலைக்கோலமுடையவனே! என்று சொல்லி உன்னைத் துதித்தாலன்றிக் குறையுடையார்களுடைய குறைகளுக்குக் காரணமான குற்றங்களை ஆராயாத பெருமானே! திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே! ஒழுக்கத்தினல் உயர்ந்த பெரியோர்களின் இடர்களை நீக்கி அருள்புரிவாயாக.

2. ஆரவாரத்தோடு தோன்றிய வெண்மையான அலைகள் சூழ்ந்த கடலிடையுண்டான நஞ்சினை மிகச் சிறிய அளவாகக் கழுத்தினில் வைத்த பெருமையையுடைய

தேவனே! உன்னை மனத்தில் நினைத்து பாடல்களும் ஆடல்களும் கொண்டு இரவும் பகலும் போற்றுபவர்களின் இடர்களைக் களைந்து அருள்புரிவாயாக. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே.

3. திருநெடுங்களத்திலே விரும்பிக் கோயில்கொண்டுள்ளவனே! குற்றமற்றவனே ! உன்னுடைய திருவடியை வழிபடுபவனாகிய மார்க்கண்டேயன் உன்னைத் துதிக்க "இவன் என்னுடைய அடியவன், இவன் உயிரைக் கவரேல்" என்று அடர்த்து வந்த கூற்றினை உதைத்த உன்னுடைய பொன்னடிகளையே போற்றி நாள்தோறும் உன்னை வழிபடுவதற்காகப் பூவும் நீரும் சுமக்கின்ற உன் அடியார்களின் இடர்களைக் களைந்து அருள்செய்வாயாக.

4. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே ! மலையரசனின் மகளாகிய பார்வதி தேவியை ஒரு பாகத்தில் கொண்டு மகிழ்ந்தவனே ! அலைகள் வீசும் கங்கை நதியானது தங்குகின்ற சடையையுடைய திருவாரூர்ப் பெருமானே ! பிரமகபாலத்தில் பிச்சையேற்று மகிழ்பவனே! எல்லோருக்கும் தலைவனே ! நின்னுடைய திருவடி நிழற்கீழ் உறுதியுடன் நிற்பாரது இடர்களைக் களைந்து அருள் புரிவாயாக.

5. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே ! யாவர்க்குந் தலைவனே ! அடிமைப் பண்பு மிக்கவர்களும் தெய்வவழிபாடு செய்பவர்களும், தவக் கோலங் கொண்டவர்களும் ஒன்றின மனதுடன் பாடலோடு உன்னுடைய திருவடியை வணங்கித் தாங்கமுடியாமல் கரை கடந்து பெருகுகின்ற அன்புடன் உன்னுடைய திருவடி நிழலை நீங்காது உன்னை வழிபடுகின்ற பக்தர்களின் துன்பங்களை நீக்கி அருள்புரிவாயாக.

6. திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ளவனே ! கிழவனாகி, பாலனாகி, மறைகள் நான்குணர்ந்து

அவைகளின் கருத்தாகவும் ஆகிக் கங்கையைச் சடையில் மறைத்தவனே! பரம் பொருளாகிய ஆதி தேவனே! நின் திருவடிகள் இரண்டையும் வழிபடுகின்ற ஆடல் பாடல் உடைய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள்புரிவாயாக.

7. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பிரானே! மாது ஒரு பாகம் உடையவனே! பகைவர்களுடைய புரங்கள் மூன்றையும் திருமால், அக்னி, வாயு மூன்றையும் கூட்டிய ஓர் கணையினால் எரித்த பெரியோனே! கொடியின் மேல் எருதினையுடையவனே! எம்பெருமானாகிய நீ அணிந்த திருநீற்றினைப் பூசிக்கொள்ளத்தக்க சந்தனம் இதுவேயென்று கொண்டிருப்பவர்களாகிய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள்புரிவாயாக.

8. திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே! குவலயாபீடம் என்னும் யானையின் தந்தத்தை முறித்த திருமாலும், பிரமனும் எல்லாவிடங்களிலும் தேடி உன்னைக் காணாது வருந்தும்படி அங்கே ஒரு சோதி வடிவாக நின்றவனே! பன்றியின் வெண்கொம்பணிந்த பெருமானே! எஞ்ஞான்றும் அழிவில்லாத நின் பொன்னடியின் நீழலைப் பற்றாகக் கொண்டு வாழ்ந்து வருகின்ற அடியார்களின் இடர்களை நீக்கி அருள்புரிவாயாக.

9. திருநெடுங்களத்தினை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பெருமானே! மலையின் உச்சியின் மேல் விளங்கும் கொடிகளையுடைய மதில்களால் சூழப்பட்ட இலங்கையில் மாறுபட்டு நின்ற அரசர்களுக்கரசனாகிய இராவணனை மலையின் கீழ் நசுங்கும்படி மிதித்தவனே! என்று நல்ல வாசகங்களால் துதித்து இரவும் பகலும் வணங்கி நின்று உள்ளம் உருகுபவர்களாகிய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள்புரிவாயாக.

10. திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பரமனே ! கொடுஞ்சொற்களையே தம் வாய் மொழிகளாகக் கொண்டுள்ள தவவேடம் இல்லாத சமணர்களும், நல்ல கொள்கையைத் தமக்கு ஆதாரமாக இல்லாத புத்தர்களும், மெய்ப்பொருள் ஒன்றையுமறிய மாட்டார்கள். அழிவில்லாத உண்மையான வாசகங்களால் அமைந்த தோத்திரங்களால் நின் திருவடிகளையே தங்கள் நெஞ்சில் வைத்து வழிபடுகின்ற அடியவர்களின் இடர்களைக் களைந்து அருள் புரிவாயாக.

11. நீண்ட வளர்கின்ற சடையையுடைய சிவபெருமான் விரும்பிக் கோயில் கொண்டுள்ள திருநெடுங்களம் என்னும் தலத்தை அறிவிற் சிறந்தவர்கள் வாழுகின்ற பெரிய வீதிகளையுடைய சீகாழித் தலைவன் ஞானசம்பந்தன் கூறிய பொருள் சிறப்பால் எல்லோராலும் நாடவல்ல இப்பனுவல் மாலையாகிய இப்பத்துப் பாடல்களையும் பாடவல்லவர்களின் பாவங்கள் தொலைந்து போகும் என்பது உறுதி.



---

## திருஞானசம்பந்தர் துதி

திருச்சிற்றம்பலம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்,

திருச்சிற்றம்பலம்

—பெரிய புராணம்.

---

## (ஈ) திருவலிதாயம்

பண்-நட்டபாடை] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பத்தரோடுபல ரும்பொலியம்மல
ரங்கைப்புனல்தூவி
ஒத்தசொல்லியுல கத்தவர்தாந்தொழு
தேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை
கின்றவலிதாயம்
சித்தம்வைத்தவடி யாரவர்மேலடை
யாமற்றிடர்நோயே. 1

படையிலங்குகர மெட்டுடையான்படி
ருகக்கலனேந்திக்
கடையிலங்குமனை யிற்பலிகொண்டுணுங்
கள்வனுறைகோயில்
மடையிலங்குபொழி லின்னிழல்வாய்மது
வீசும்வலிதாயம்
அடையநின்றவடி யார்க்கடையாவினை
யல்லற்றுயர்தானே. 2

ஐயனெய்யனணி யன்பிணியில்லவ
ரென்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்றிரு
மாதோடுறைகோயில்
வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர்
கின்றவலிதாயம்
உய்யும்வண்ணநினை மின்னினைந்தால்வினை
தீருந்நலமாமே. 3

ஒற்றையேறதுடை யானடமாடியோர்
பூதப்படைசூழப்
புற்றிளுகமரை யார்த்துழல்கின்றவெம்
பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட
வுள்கும்வலிதாயம்
பற்றிவாழுமது வேசரணுவது
பாடும்மடியார்க்கே 4

புந்தியொன்றிநினை வார்வினையாயின
தீரப்பொருளாய
அந்தியன்னதொரு பேரொளியானமர்
கோயிலயலெங்கும்
மந்திவந்துகடு வன்னொடுங்கூடி
வணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதவவர் தம்மடும்வெந்துயர்
தீர்தலெளிதன்றே. 5

ஊனியன்றதலை யிற்பலிகொண்டுல
கத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரிபோர்த்துழல்
கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறை வைத்தவெம்மாதி
மகிழும்வலிதாயந்
தேனியன்றநறு மாமலர்கொண்டுநின்
றேத்தத்தெளிவாமே. 6

கண்ணிறைந்தவிழி யின்னழலால்வரு
காமன்னுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொரு பான்மகிழ்வெய்திய
பெம்மானுறைகோயில்

மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள்
வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்தபெரு மான்கழலேத்தநம்
முண்மைக்கதியாமே. 7

கடலினஞ்சமமு துண்டிமையோர்தொழு
தேத்தநடமாடி
அடலிலங்கையரை யன்வலிசெற்றருள்
அம்மானமர்கோயில்
மடலிலங்குகமு கின்பலவின்மது
விம்மும்வலிதாயம்
உடலிலங்குமுயி ருள்ளளவுந்தொழ
வுள்ளத்துயர்போமே. 8

பெரியமேருவரை யேசிலையாமலை
வுற்றுரெயின்மூன்றும்
எரியவெய்தவொரு வன்னிருவர்க்கறி
வொண்ணுவடிவாகும்
எரியதாகியுற வோங்கியவன்வலி
தாயந்தொழுதேத்த
உரியராகவுடை யார்பெரியாரென
வுள்கும்முலகோரே. 9

ஆசியாரமொழி யாரமண்சாக்கிய
ரல்லாதவர்கூடி
ஏசியீரமில ராய்மொழிசெய்தவர்
சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரவடி யார்க்கருள்செய்து
வளர்ந்தான்வலிதாயம்
பேசுமார்வமுடை யாரடியாரெனப்
பேணும்பெரியாரே. 10

வண்டுலவுகும்மண மல்கியசோலை
வளரும்வலிதாயத்
தண்டவாணனடி யுள்குதலாலருண்
மாலைத்தமிழாகக்
கண்டல்வைகுகடற் காழியுண்ஞானசம்
பந்தன்றமிழ்பத்துங்
கொண்டுவைகியிசை பாடவல்லார்குளிர்
வானத்துயர்வாரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர்—வலிதாய நாதர் தேவி—தாயம்மை

**பதிக வரலாறு:**—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தனது ஆருவது தலயாத்திரையாகத் தொண்டை நாட்டிற்கு விஜயம் செய்தார். அப்போது முறையாகப் பல தலங்களை வணங்கி வந்து பின்னர் திருவேற்காட்டைச் சென்று வணங்கி அடுத்து திருவலிதாயத்தை வணங்கி 'பத்தரோடு' எனும் இப் பதிகத்தைப் பாடியருளினர்கள். திருவலிதாயத்தைத் தியானிப்பவர்களுக்குத் துன்பமில்லை என்று இப்பாட்டில் ஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிச் செய்கின்ருர்.

**பதிகப்பொழிப்புரை:**—1. பக்தர்களோடு மற்றும் பலரும் தமது கைகளில் மலர்களையும் ஜலத்தினையும் மந்திரங்களோடு சொரிந்து வழிபடவும் உலகத்தவர் தொழுது வணங்கவும் உயர்ந்த சென்னியின் மீது ஊமத்தம்பூச் சூடிய சிவபெருமான் என்றும் பிரியாதுறைகின்ற திருவலிதாயத்தைச் சித்தத்திலே வைத்த அடியார்களைத் துன்பங்களாகிய நோய்கள் வந்து அடையா.

2. படைக்கலன்கள் விளங்குகின்ற எட்டுக் கரங்களை உடையவரும் பலிப்பாத்திரத்தினை ஏந்தி வஞ்சனையாக மனைகள்தோறும் பிச்சைக்கு நின்றவனுகிய கள்வனுகிய சிவபெருமான் உறைகின்ற தேன்பிலிற்றும் சோலைகளை உடைய திருவலி

தாயத்தைச் சென்றடையும் அடியார்களை வினைக்குக் காரண மான அல்லலும் துன்பமும் வந்து அடையா.

3. தலைவன், நுண்மையாய் இருப்பவன், மிகஅருகில் இருப்பவன் என்றெல்லாம் மலப்பிணிகள் நீங்கிய பெரி யோர்கள் தொழுது ஏத்த, செந்நிறமுடையவனும், வெம் மையான சூலப்படையினை ஏந்த வல்லவனுமாகிய சிவபிரான் உமாதேவியாரோடு விரும்பி உறையும் கோயில் உலகத்தவர் வந்து தொழ துயர்களைத் தீர்க்கும் திருவலிதாயமாகும். அத் தலத்தினை நீங்கள் நற்கதியடையும் வண்ணம் நினையுங்கள். அங்ஙனம் சிந்திப்பீர்களானால் உங்கள் வினைகளையெல்லாம் தீர்க்கும் தலம் அதுவாகும். அதாவது திருவலிதாய நாதரைத் தியானித்து, உய்யும் நெறியினை வேண்டினால் வினைகள் நீங்கும் என்றும் அவ்வாறு வினைகள் நீங்க விளைவது இன்பம் என்பதும் கருத்து.

4. சிறப்பான இடத்தை உடையவன், பூதப்படை சூழ நடமாடுபவன், புற்றில் உள்ள பாம்புகள் மார்பின்மீது சூடி விளங்குபவன். அத்தகைய சிவபெருமான் உமாபிராட்டி யாரோடு உறையும் திருக்கோயில் உலகம் முழுவதும் ஒளி பெற நினைக்கும் திருவலிதாயமாகும். அத்தலத்தினையே பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்வதே அடியார்களுக்குச் சரணாகும். (அதாவது புகலிடமாகும்).

5. மன ஒருமையுடன் தியானிக்கும் அடியார்கள் தமது வினைகளெல்லாம் தீரும் பொருட்டு வணங்கும் பொருளாகிய அந்திக் காலத்து ஒளிபோன்ற செந்நிறமுடைய வனாகிய சிவபிரான் அமருங்கோயில் பெண்குரங்கும் ஆண் குரங்கும் கூடி வந்து வணங்கும் திருவலிதாயமாகும். அதனைச் சிந்தித்து வழிபடாதவரது வினைகள் தீர்தல் எளி தான காரியமன்று. (அறிவற்ற அஃறிணை உயிர்களான மந்தி யும் கடுவனும் வணங்கும் போது, அறிவுள்ள உயர்திணை உயிர்களாகிய மக்கள் வழிபடுவது மிக அவசியம் என்பதும்

அங்ஙனம் வழிபடாராயின் அவர்களது வினைகள் நீங்கா என்பதும் வற்புறுத்தப்படுகிறது).

6. ஊன் கழிக்கப்பெற்ற தலையோட்டில் பிச்சையேற்று உலகத்தவர் யாவரும் தொழுது வணங்கும்படி கானத்து யானையின் தோலினை உரித்துப் போர்த்தி விளங்கும் கள்வனும் (உள்ளங்களைக் கொள்ளை கொள்பவன்) வானில் விளங்கு கின்ற பிறைச்சந்திரனைத் தலையில் சூடியவனுமாகிய சிவ பிரான் மகிழ்ந்து கோயில் கொண்டுள்ள திருவலிதாயத்தை நறுமணமலர் கொண்டு வணங்கினால் ஞானம் உண்டாகும்.

7. கண்ணிலே நிறைந்து நின்ற அழலினால் மன்மதனை எரித்தவனும், ஒரு பாகத்தில் பெண்ணினை விரும்பி வைத்த வனுமாகிய சிவபெருமான் உறைகின்ற கோயிலாகிய உலகத் தில் புகழ் நிறைந்து அடியார்கள் வணங்கும் திருவலிதாயத் துள் நிறைந்த அப்பெருமானது திருவடிகளைத் தொழ என்றும் நிலைத்து உள்ளதாகிய வீட்டின்பம் கிட்டும்.

8. திருப்பாற்கடலினின்றும் எழுந்த கொடுவிடத்தை அமுதெனக் கொண்டு உண்டருளி வானவர்கள் யாவரும் தொழுது வணங்க நடனமாடியவனும், இலங்கை மன்ன வனாகிய இராவணன் வலியினைக் கெடுத்து அவனை ஆட் கொண்டருளியவனுமாகிய பெருமான் அமருங் கோயில் பாக்குமரங்களில் பலாப்பழங்களின் தேன் வந்து பொருந்து கின்ற திருவலிதாயம். அதனை மக்கள் உடலில் உயிர் உள்ள வளவும் அதாவது உயிருடன் உலகில் உள்ள வரையிலும் தொழுவார்களாயின் அவர்களது மனதிலே ஏற்படும் துன்பங் கள் யாவும் மடியும்.

9. மிகப் பெரிய மேருமலையினை வில்லாகக் கொண்டு திரிபுரத்து அசுரர்களை அவரது முப்புரமும் எரியும்படி எய்த வன். பிரம்ம விஷ்ணுக்களாகிய இருவர்க்கும் அறிய வொண்ணாத வடிவாகிய அக்கினிப் பிழம்பின் உருவமாய் ஓங்கியவன். இத்தகைய பெருமானின் திருவலிதாயத்தினைத்

தொழுதேத்த உரியாராகிய சிவனடியார்களையே பெரியோர்கள் என்று உலகத்தவர் நினைப்பர்.

10. தம்மை வணங்குபவர்க்கு ஆசிகளைக் கூட நிரம்ப மொழியும் பண்பற்ற சாக்கியரும் சமணருமாகிய சைவரல்லாதவர் கூடி இகழ்ச்சியுடன் அன்பில்லாமல் பேசுஞ்சொற்களை உறுதிப்பொருளாகக் கொள்ளாதீர்கள். உயர்வு தாழ்வின்றி அடியார் யாவர்க்கும் அருள் புரியும் பெருமையினால் உயர்ந்த நமது சிவபெருமானுடைய திருவலிதாயத்தினை இடைவிடாது புகழ்ந்து பேசும் அடியார்களுக்கு நாம் அடியார் என்று பெரியோர்கள் கருதுவர்.

11. வண்டுகள் சூழ்ந்து விளங்கும் மணம் நிறைந்த சோலைகள் வளர்ந்து ஓங்கும் திருவலிதாயத்துக் கோயில் கொண்ட தேவர்கள் தலைவனாகிய சிவபெருமானது திருவடிகளை மனத்துட்கொண்டு சிந்தித்தலால் தானமு நிறைந்த கடற்பகுதியினைச் சேர்ந்த திருஞானசமபந்தன் மாலையாகக் கூறிய தமிழ்ப் பாடல்கள் பத்தும் மனத்தினுள் கொண்டு தியானித்து இசையுடனும் பாடவல்லார் சுவர்க்கலோகத்தினும் மிகப் பெரியதான மோட்சம் என்னும் பேரின்பத்தினைப் பெறுவர்.

—சிவம்—

---

## திருஞானசம்பந்தர் துதி

கவிக்குத் தகுவன கண்ணுக் கினியன கேட்கில்இன்பம்
செவிக்குத் தகுவன சிந்தைக் குரியன பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றில் முகந்துதஞ் சிற்றில்தொறும்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன் குரைகழலே.

—நம்பியாண்டார் நம்பி.

---

## (உ) திருமுதுகுன்றம்

திருவிருக்குக்குறள்

பண்—குறிஞ்சி] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவிர்க்கு, என்றும் இன்பமே. 1

அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்
நித்தம் ஏத்துவிர்க், குய்த்தல் செல்வமே. 2

ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர், வையம் உமதாமே. 3

ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்
வாச மலாதூவப், பாச வினைபோமே. 4

மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்
பிணியா யினகெட்டுத், தணிவா ருலகிலே. 5

மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்
பொய்யா ரிரவோர்க்குச், செய்யாள் அணியாளே. 6

விடையான் முதுகுன்றை, இடையா தேத்துவார்
படையா யினசூழ, உடையார் உலகமே. 7

பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்
அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. 8

இருவர் அறியாத, ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. 9

தேரர் அமணரும், சேரும் வகையில்லான்
நேரின் முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. 10

நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்
ஒன்றும் உரைவல்லார், என்றும் உயர்வோரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி பெயர்—பழமலைநாதர் தேவி—பெரியநாயகி

**பதிக வரலாறு !** — திருநீலகண்ட யாழ்ப்பாணருடன் தில்லையம்பதி தரிசித்து அவர் வேண்டியபடியே திருஞான சம்பந்த சுவாமிகள் திருஎருக்கத்தம்புலியூரையும் தரிசித்துப் பெருமானார் பதி பல வணங்கி திருமுதுகுன்றம் சென்று அத் தலத்தை வலமாக வந்து வழிபடும்பொழுது இந்த திருவிருக் குக்குறள் பதிகத்தை யருளிச் செய்தார்.

**பதிகப் பொழிப்புரை:**-1. இன்றைக்கே முதுகுன்றம் தலத் தினை மலர் தூவி ஏத்தும் உங்களுக்கு என்றும் இன்பமாகும்.

2. இறைவன் மேவியிருக்கும் திருமுதுகுன்றத்தைப் பக்தியுடன் நித்தமும் துதிக்கும் உங்களுக்குப் பொருள் பெருகும்.

3. நமக்கெல்லாம் தலைவனாகிய பரமசிவன் எழுந்தருளி யிருக்கும் திருமுதுகுன்றத்தை மனதில் வஞ்சம் இல்லாமல் கைகூப்பித் தொழும் உங்களுக்கு இவ்வுலகமெல்லாம் உரிமை யாகும்.

4. சிவபெருமானுடைய திருமுதுகுன்றத்தை அன்பாகி நீங்கள் மணம் மிக்க மலர்களைத் தூவி யருச்சிக்க பாசங்களும் வினையும் போகும்.

5. அழகு பொருந்திய திருமுதுகுன்றத்தைப் பணிந் தெழுபவர்கள் யாவரோ அவர்களே நோய்கள் யாவும் நீங்கி உலகிலே மனச்சாந்தியுடன் வாழ்வார்கள்.

6. பக்தர்களின் நெருக்கம் பொருந்திய திருமுதுகுன்றில் இறைவனை ஐயா! எனத் தோத்தரிக்கவல்லவர்கள்

இரவலர்க்கு இல்லையென்று பொய் சொல்லமாட்டார்கள். இலக்குமிதேவியும் அவர்களுக்கு உடன் உறைவாகிவிடுவாள்.

7, இடபவாகனனுடைய திருமுதுகுன்றத்தை, இடைவிடாது துதிப்பவர்கள் பரிவாரங்கள் சூழ உலகம் முழுவதையும் தமதாக உடையவர் ஆவார்கள்.

8. பத்துத் தலையனாகிய இராவணனைக் கத்தும்படி ஒரு விரலால் ஊன்றிய பெருமானுடைய திருமுதுகுன்றத்தை நெருங்கிப் பணியுங்கள்.

9. திருமால், நான்முகன் என்னும் இவ்விருவரும் அறியாத ஒப்பற்றவனும் ஏகனுமாகிய பெருமானுடைய திருமுதுகுன்றத்தை மனமுருகித் தியானிப்பவர்கள் எல்லா வளங்களும் பெருகித் திகழ்வார்கள்.

10. புத்தரும் சமணரும் சென்றடைய வழியில்லாத பெருமானின் திருமுதுகுன்றத்தை நீங்கள் நிலையாக இருந்து மனத்திலே தியானம் செய்யுங்கள்.

11. திருமுதுகுன்றத்தை திருஞானசம்பந்தன் இறைவனோடு நன்ருக ஒன்றிய நிலையில் நின்று அருளிய இவ்வுரை ஓத வல்லவர்கள் எக்காலத்தும் இவ்வுலகில் உயர்ந்தவர்களாக இருப்பார்கள் (உயர்ந்த பதவிகள் பெற்று மிக்க புகழுடன் விளங்குவார் என்றவாறு)

சிவம்



## (உஊ) திருவெண்காடு

பண்-சீகாமரம்] [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங்
கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும்
பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும்
பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும்
விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும்
பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர்
ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன்
வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத்
தோயாவாந் தீவினையே. 2

மண்ணொடுநீ ரனல்காலோ
டாகாயம் மதிஇரவி
எண்ணில்வரும் இயமானன்
இகபரமும் எண்டிசையும்

பெண்ணிஞெடாண் பெருமையொடு
சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண்
காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல்
வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை
மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை
தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த
நகைகாட்டுங் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல்
வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால்
வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர்
விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற் ருன்அடியார்
என்றடர அஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்யரவுந்
தாங்கினுன் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர்
கூறுகந்தான் உறைகோயில்
பண்மொழியால் அவன்நாமம்
பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல்
வீற்றிருக்கும் வெண்காடே. 6

சக்கரம்மாற் கீந்தானும்
சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமேல் அசைத்தானும்
அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும்
வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளநன் குடையானும்
முக்கணுடை இறையவனே. 7

பண்மொய்த்த இன்மொழியாள்
பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்தன்று
அருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை
நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண்
டிசைமுரலும் வெண்காடே. 8

கள்ளார்செங் கமலத்தான்
கடல்கிடந்தான் எனஇவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி
உயர்ந்தாழ்ந்தும் உணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும்
மேதகுவெண் காட்டானென்று
உள்ளாடி உருகாதார்
உணர்வுடைமை உணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள்
மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்கள் அவர்பிறிமின்
அறிவுடையீர் இதுகேண்மின்

வேதியர்கள் விரும்பியசீர்
வியன்திருவெண் காட்டானென்று
ஓதியவர் யாதுமொரு
தீதிலரென் றுணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன்
தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைசென்னி
விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை
பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய்
வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் : தேவி :

சுவேதாரண்யேச்வரர் பிரம்மவித்தியாநாயகி

பதிக வரலாறு:—நான்முறை வித்தகர், முத்தமிழ் விரகர் திருஞானசம்பந்தர் திருநனிபள்ளி, திருவலம்புரம், திருச்சாய்க்காடு முதலிய திருத்தலங்களைத் தரிசித்து உள்ளமுருக இறைவனை ஏத்திப் பரமனைப் பணிந்து பதிகங்கள் பாடிய பின்னர் திருவெண்காட்டினை அடைந்தார். அங்குத் தொண்டர்கள் அனைவரும் எதிர்கொண்டு இன்னதன்மையர் ஆனார்கள் என்று சொல்ல ஒண்ணாத பெருமகிழ்ச்சி பொங்கச் சண்பை மன்னரை ஆலயத்துக்கு அழைத்துச் சென்றார்கள். திருஞான சம்பந்தரும் ஆலய கோபுரமாகிய ஸ்தூல லிங்கத்தை முதலில் தரிசித்துப் பின்னர் பேருவகையோடு உள்புக்கு வலம் வந்து பெருமான் திருமுன்பு வந்து நிலமுறத் தொழுது வீழ்ந்து ''கண் காட்டு நுதல்'' என்றெடுத்து அத்தலத்துத் தீர்த்தமான முக்குளத்தையும் சேர்த்து பாடியருளினார். இத்திருப்பதிகம் ''செப்பரும் பதிகமாலை'' எனச் சேக்கிழார் பெருமானால் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

இப்பதிகத்தின் இரண்டாவது அருமைத் திருப்பாடல் திருப்பெண்ணாகடத்தில் வாழ்ந்த அச்சுத களப்பாளர் என்பவர் புத்திரப்பேறின்றிப் பலகாலம் வருந்திப்பின் தமது குல குருவாகிய அருணந்தி சிவாசாரிய மூர்த்திகளது ஆணைப்படி திருமுறையிற் கயிறு சாத்தியபோது உதயமாய் அத்திருவுள்ளப்படி அவர் திருவெண்காட்டையடைந்து இறைவனை வணங்கி முக்குளத்தில் தமது மனைவியாருடன் விதிப்படி மூழ்கி வழிபட்டு சுவேதவனப்பெருமாள் என்னும் ஸ்ரீமெய் கண்டதேவராகிய சைவப் பிரதம சந்தானசாரிய மூர்த்திகளைப் புத்திரராகப் பெறும் திருவருள் பெற்றார். திருவெண்காட்டில் முக்குளம் மூழ்கி இத்திருப்பதிகத்தினைப் பக்தியுடன் ஓதித் திருவெண்காட்டுப் பரமனைப் பரவுபவர்கள் நன்மக்கட்பேறு பெறுவர். இன்றும் அம்மாதிரி பலர் செய்து அருள் பெறுகிறார்கள். சோமன், சூரியன், அக்கினி ஆகிய மூவரால் உண்டாக்கப்பட்டு முறையே சோம தீர்த்தம், சூரிய தீர்த்தம், அக்கினி தீர்த்தம் என வழங்குபவையே முக்குளம் எனப்படுவது. திருவெண்காடு சென்று முக்குளம் மூழ்க இயலாதவர்களுங்கூட இப்பதிகத்தை உள்ளன்புடன் ஓதுவார்களாயின் முக்குளம் மூழ்கிய பயனையும் மற்றும் நற்பேறுகள் யாவும் பெறுவார்கள் என்பது திண்ணம்.

**பதிகப் பொழிப்புரை:—**

1. நெருப்புக் கண்ணைக் காட்டுகின்ற நெற்றியையுடையவனும், எரிகின்ற தீயைக் காட்டுகின்ற கையினை உடையவனும், ஒருபாகத்திலே உமாதேவியைக் காட்டும் உருவம் உடையவனும், பிறைச்சந்திரனைத் தலையின் மீது கொண்டவனும், பண்ணினைக் காட்டுகின்ற இசையானவனும், பயிரினை உண்டாக்கும் மழைக்குக் காரணமான புயலாகவும் உள்ளவனும், திருவெண்காட்டில் எழுந்தருளியிருப்பவனும் இடபத்தைக் கொடியாக உடைய சிவபெருமானே யாகும்.

2. மூங்கிலைப் போன்ற தோளினையுடைய உமாபிராட்டியாரை ஒரு பங்கிலே கொண்ட சிவபெருமானின் திருவெண்

காட்டுத் தல தீர்த்தங்களாகிய சோம, சூரிய, அக்கினி தீர்த்தங்கள் எனப்படும் முக்குளத்திலே முழுகும் செய லுடையவர்களை தீவினைகள் வந்து பீடிக்காது. பேய்கள் வந்து அடையா. ஏற்கெனவே பிடித்திருப்பினும் அவை விலகிப்போகும். மக்கட்பேறும் மற்றும் உள்ளத்திலே விரும்பிய வரங்கள் யாவும் இறைவனால் அருளப்பெறுவார் கள். இதில் ஒரு சிறிதும் ஐயம் வேண்டாம்.

3. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், இயமானன் என்ற எட்டு உருவங்களாயும், இம்மை மறுமை யாயும் எட்டுத் திசைகளாயும், பெண்ணினோடு ஆணும், பெரியவற்றிற்கெல்லாம் பெரியதாயும், சிறியவற்றிற்கெல்லாம் சிறியதாயும் ஆன பேரருளை ஆள்பவனாகிய சிவபெருமான் தேவேந்திரன் தன்னை வந்து வணங்குமாறு திருவெண் காட்டைத் தனக்கு உறைவிடமாக விரும்பி எழுந்தருளினன். (திருவெண்காட்டில் சிவபிரானை தேவேந்திரன் வழிபட்டனன் என்பது கருத்து).

4. திருநீலகண்டப் பெருமான் உறையும் திருவெண் காட்டின் குளிர்ச்சி பொருந்திய முல்லை நிலத்தில் மடல் விரிந்த தாழை மலரின் நிழலைப் பார்த்து இது தன்னை உண்ண வரும் ஒரு குருகு (அதாவது நாரை) என்று நினைத்து குளத் திலே உள்ள கெண்டை மீன் தாமரைப் பூவின் பக்கல் சென்று மறைந்துகொள்ள அதைக்கண்டு கடல், தமது ஒளி விடுகின்ற முத்துக்களாகிய பற்களைக் காட்டும் காட்சி காணப் படும். (கெண்டையின் அறியாமையை நோக்கி கடல் நகைத்தது என்றவாறு)

5, கடற்கரைச் சோலைகள் நிறைந்த திருவெண்காட்டுப் பெருமானின் திருவடிகளில் பூமாலைகளும், நறுஞ்சந்தனமும் இட்டு வழிபட்ட நல்லதொரு மறையவனை அடர்த்து வந்த கொடிய காலனுடைய உயிரை மாய்த்தபின் இயமனின் தூது வர்கள் சிவனடியார்களை நெருங்குவதற்கும் அச்சமுற்றனர். (மார்க்கண்டேயருக்காகக் காலனை அடர்த்தது போலவே

சுவேத கேது என்னும் அந்தணன் பொருட்டு இத்தலத்திலும் கால ஸம்ஹாரம் நிகழ்ந்ததாகத் தலபுராணம் கூறுகிறது. பதினென் புராணங்களுள் ஒன்ருன லிங்க புராணத்துள்ளும் இந்த வரலாறு கூறப்பட்டுள்ளது).

6. குளிர்ச்சியுள்ள சந்திரனையும், கொடுவிடமுடைய பாம்பினையும் சடாமுடியுடன் தாங்கினவனும், ஒளி பொருந்திய பிறைச்சந்திரனை ஒத்த நெற்றியை உடைய உமாதேவியாரை இடப்பாகத்தில் விரும்பி வைத்துக் கொண்டுள்ளவனுமான சிவபெருமான் உறைகின்ற இடம் பண்ணோடு கூடிய மொழிகளால் அவன் நாமங்கள் பலவற்றை ஓதுதற்குப் பசுங் கிள்ளைகள் வெண்மேகம் வரை உயர்ந்திருக்கும் கரிய பனை மரங்களின் மேல் வீற்றிருக்கும் திருவெண்காடேயாகும்.

7. திருமாலுக்குச் சக்கரப் படையினை அருளியவனும், சலந்தரன் என்னும் அசுரனின் உடலை இருகூறுகளாகப் பிளந்தவனும், அரையின்மேல் எலும்பு மாலையைத் தரித்தவனும் ஐராவதம் என்னும் தேவலோகத்து யானை அடைந்து வழிபட அதற்கு மிக்க அருளைச் சுரந்த திருவெண்காடும் முழுகுவாரது வினைகளைப் போக்குகின்ற முக்குளமும் உடையானும் மூன்று கண்களையுடைய இறைவனுகிய சிவ பெருமானேயாகும்.

8. பண்சேர்ந்த இனிய மொழிகளையுடைய உமாதேவியார் பயப்படும்படியாகக் கயிலைமலையைப் பெயர்த்தெடுத்த பைத்தியக்காரனுகிய இராவணனுடைய மார்புகளை நெரித்துப் பிறகு அவன் சாமகானம்பாடி மகிழ்வித்தபோது அவனுக்கு வரங்கள் அருளிய சிவபெருமான் உறையும் இடம், கண்கள் நெருங்கிய தோகைகள் உடைய நீலமயில்கள் நடனமாட கடல்கள் ஒலிக்க, விண்ணளாவிய சோலைகளில் கோடுகளையுடைய வண்டுகள் இசைபாடுகின்ற திருவெண்காடேயாகும்.

9. தேன் மிகுந்த தாமரை மலரோனுகிய பிரமதேவனும், கடலில் கிடந்தவனுமாகிய திருமாலும் ஆகிய இவர்கள்

தங்களுடைய பெருமையை நிலைநிறுத்துவதற்காக (தங்களில் யார் பெரியவர் என்பதை நிலைநிறுத்த) முறையே ஆகாயத்தில் உயரப் பறந்தும் பாதாளத்தில் மிகவும் ஆழமாகச் சென்று தேடியும் உணர்வதற்கரியவனாகிய சிவபெருமான் என்றும் வெள்ளையானை தவஞ்செய்கின்ற மேன்மையினையுடைய திரு வெண்காட்டைக் கோயிலாகக் கொண்டவன் என்றும் உள்ளங்கசிந்து உருகாதவரது அறிவை நாம் மதிக்க மாட்டோம். (சிவபிரானது பெருமையையறிந்து உளங்கனிந்து உருகுபவரையே நாம் மதிப்போம் என்றபடி)

10. புத்தர்கள், சமணர்கள் ஆகியோரது கொடு மொழி களையே உண்மைப் பொருள் என்று கூறும் அறிவிலிகளை விட்டு அகலுங்கள். அறிவுடையோர்களே! நாம் கூறும் இவ் விஷயத்தைக் கேளுங்கள். வேதம் ஓதுபவர்கள் விரும்புகிற பெருமையுடைய விசாலமான திருவெண்காட்டைக் கோயி லாகக் கொண்டவன் என்று சொல்லுபவர்கள் எந்தவிதமான தீமைகளும் இல்லாதவர்கள் என்று அறிந்து கொள்ளுங்கள். (அன்னவர்களைத் தீமைகள் வந்து அடையா என்பது மட்டு மல்லாமல் முன் வினைவயத்தால் உள்ளனவும் தொலைந்து போகும் என்றபடி)

11. குளிர்ச்சி மிகுந்த பொழில்கள் சூழ்ந்த சண்பை என்னும் சீகாழிப்பதி உள்ளோர்களின் தலைவனாகிய தமிழ் வல்ல ஞானசம்பந்தன் ஆகாயத்தில் விளங்குகின்ற பிறைச் சந்திரனைச் சூடிய சிரத்தினையுடைய சிவபெருமான் உறை கின்ற திருவெண்காடு என்ற தலத்தை, பண் விளங்குகின்ற செம்மை நெறி செலுத்துகின்ற தமிழ் மாலையாகப் பாடிய இவை பத்தும் வல்லவர்கள் இம்மண்ணுலகில் பெருமையுடன் வாழ்ந்தவர் ஆவார்கள். பிறகு அவர்கள் விண்ணுலகத்திலுஞ் சிறந்து வாழும்படி போய்ச் சேருவார்கள்.

சிவம்

## (எ) பஞ்சாக்கரத் திருப்பதிகம்

பண்-காந்தாரபஞ்சமம்] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்று
அஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே. 1

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே. 2

ஊனிலு யிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நன்புலத்து
ஏனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 3

நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல்கெ டச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்தமர் கொண்டு போமிடத்து
அல்லல்கெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 4

கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச ஐம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செ ழுத்துமே. 5

தும்ம லிருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே. 6

வீடுபி றப்பை அறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாடொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன அஞ்செ ழுத்துமே. 7

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டையி ராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம ளிப்பன அஞ்செ ழுத்துமே. 8

கார்வணன் நான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன அஞ்செ ழுத்துமே. 9

புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன அஞ்செ ழுத்துமே. 10

நற்றமிழ் ஞானசம் பந்த னுன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்ப ராவரே. 11

திருச்சிற்றம்பலம்

பதிக வரலாறு:—மறையனைத்தும் ஓதாதுணர்ந்த திருஞானசம்பந்தர்க்கு உபநயன காலத்தில் மறை நான்கும் தந்தோம் என்றனர் அந்தணர். அவர் முன்னே எண்ணிறந்த வேதங்களை ஓதினர் திருஞானசம்பந்தர். அந்தணர் யாவரும் அவரை வணங்கித் தமக்குற்ற ஐயங்களையெல்லாம் தீர்த்துக் கொண்டனர். மேலும் அவர்கள் தெளிவுறும் வண்ணம் மந்திரங்கட்கெல்லாம் முதன்மையானது திருவைந்தெழுத்தே

யாகும் என்று அறிவுறுத்தும் வகையால் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்.

**பதிகப் பொழிப்புரை:—1.** தூங்கும்போதும் விழித்துக் கொண்டிருக்கும்போதும் மனம் நைந்து உருகி நாள்தோறும் நினையுங்கள். வஞ்சகமில்லாமல் இறைவன் திருவடியை வாழ்த்திய மார்க்கண்டேயர் மேல் வந்த இயமனை உதைத்தன **திருவைந்தெழுத்தேயாகும்.**

2. மந்திரங்களாகவும், நான்கு வேதங்களாகவும் ஆகி தேவர்களுடைய சிந்தையினுள்ளும் நின்று அவர்களை ஆள்வன; எரியோம்பிச் செந்நெறி நிற்கும் வேதியர்கட்கு காலை, உச்சி, மாலை ஆகிய மூன்று சந்தி வேளைகளிலும் செபிக்க வேண்டிய திருமந்திரம் **திருவைந்தெழுத்தேயாகும்.**

3. உடம்பில் பிராணாயாமத்தால் மூச்சையடைக்கும் நிலையில் ஞான ஒளிச்சுடர் விளக்கினையேற்றி நல்ல மெய் யறிவாகிய மற்றைய வழியைத் திறந்து ஏத்துவோர்க்கு இடர்க ளானவற்றைக் கெடுப்பன **திருவைந்தெழுத்தேயாகும்.**

4. நல்லவர்கள் தீயவர்கள் என்ற பேதம் இன்றி தன்னை விரும்பிச் செபித்தவருடைய துன்பங்கள் நீங்கி முக்தியடை யும் மார்க்கத்தைக் காட்டுவன. எமதூதர்கள் கொல்லு வதற்குக் கொண்டுபோகுமிடத்துங்கூட அங்கும் துன்பத் தைக் கெடுப்பன **திருவைந்தெழுத்தேயாகும்.**

5. மன்மத பாணங்கள் ஐந்து. பூதங்களும் ஐந்து. பாம்பின் படம் ஐந்து. கற்பகச் சோலைகள் ஐந்து. செபிப்போ ருடைய கைவிரல் ஐந்து. இவ்வண்ணம் ஐவகையாய்க் காணப்படும் யாவற்றுக்கும் காரணமானது **திருவைந் தெழுத்தேயாகும்.**

6. தும்மல், இருமல் முதலியன தொடர்ந்து வந்த போதும் (இக்காலத்தும் உயிர் நீங்குவது உண்டு), கொடிய நரக வேதனைகளை அனுபவிக்கும் வண்ணம் அவை வந்த போதும் முந்தைய பிறவியில் செய்த வினைகள் வருத்த இப்

பிறவியிற் சார்ந்த போதிலும், இப்பிறவியில் துணையாய் நிற்பது மட்டுமன்றி மறுமைத் துணையாக இருப்பனவும் திருவைந்தெழுத்தேயாகும்.

7. மரணம், மீண்டும் பிறப்பு இவற்றை அறுத்து இத் திருமந்திரத்தைப் பாராட்டிச் செபிப்பாரது துன்பங்களைத் தவிர்ப்பன. துன்பங்களை நீக்கியபின் தினமும் செல்வங்கள் யாவும் கொடுப்பன. நிலைபெற்ற நடனத்தையாடி மகிழ்வன திருவைந்தெழுத்தேயாகும்.

8. வண்டுகள் விரும்பும் கூந்தலுடைய உமாதேவியால் பாராட்டிச் செபிக்கப்பட்டன. இராவணன் முற்காலத்தில் பாடித் துன்பம் நீங்கி தேர், வாள், நீண்ட ஆயுள் முதலியவைகளைப் பெற்று உய்யக் காரணமாயிருந்தன. தொண்டர்கள் மனத்திற்கொண்டு துதித்தபின் அவர்க்கு அண்டங்களையெல்லாம் அரசாளக்கொடுப்பன திருவைந்தெழுத்தேயாகும்.

9. திருமாலும், நான்முகனும் காணுதற்கரிய சேவடியின் பெருமையை நாள்தோறும் இறைவனுடைய திருப்பெயரின் மேன்மையைப் பலகாலும் பேசிவரும் பக்தர்களுக்கு திளைத்தற்கிடமாயிருப்பன திருவைந்தெழுத்தேயாகும்.

10. புத்தர்களும் சமணர்களும் பேசித் திரியும் பொய் வார்த்தைகளை மனதிற் கொள்ளாத தெளிந்த சித்தத்தவர்களால் உறுதியுடன் கொள்ளப்பட்டன. ஸகல சக்தியுடைய திருநீற்றை அணிபவர்மேல் வரும் பகைவர்க்கெல்லாம் அவர்களை எதிர்த்துக் கொல்லும் அம்பு போன்றது திருவைந்தெழுத்தேயாகும்.

11. நன்னெறி கூட்டுவிக்கும் தமிழ் பரப்பும் திருஞானசம்பந்தன், நான்கு மறைகளும் கற்றவன், சீகாழி மக்கள் தலைவன், மனத்தில் தியானித்துப் பாடிய, கேடுகள் யாவையும் இல்லையாகச் செய்யக்கூடிய திருவைந்தெழுத்தின் பெருமைகளை அடக்கிய இம்மாலையின் பத்துப் பாடல்களும் கற்று ஓதவல்லவர் தேவர்களாவார்கள்.

சிவம்

## (ஏ) நமச்சிவாயத் திருப்பதிகம்

பண்-கௌசிகம்] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே. 1

நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே. 2

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே. 3

இயமன் தூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயனன் நாமம் நமச்சி வாயவே. 4

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சி வாயவே. 5

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாமம் நமச்சி வாயவே. 6

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரதன் நாமம் நமச்சி வாயவே. 7

இலங்கை மன்ன னெடுத்த அடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங்கொள் நாமம் நமச்சி வாயவே. 8

போதன் போதன கண்ணனு மண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி அலந்தவர்
ஓது நாமம் நமச்சி வாயவே. 9

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுள் கண்டன் நமச்சி வாயவே. 10

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிக வரலாறு**—திருநல்லூர்ப்பெருமணம் என்னும் பதியில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் திருமணம் முடிந்ததும் இந்த இல்லொழுக்கம் வந்து சார்ந்ததே! இவள் தன்னோடும் அந்தமில் சிவன் தாள் சேர்வன் என்னும் ஆதரவு பொங்க உறவினரும் தொண்டர் கூட்டமும் சூழ அவ்வூர் ஆலயத்தை நோக்கி வந்தார். திருக்கோயிலுள் சென்று உன்னுடைய பாத நிழலில் சாரும் பருவம் வந்ததென்று பாடவும்

இறைவன் "நீயும் பூவை யன்னாளும் இங்குள் புண்ணிய மணத்தின் வந்தார் யாவரும் எம்பாற்சோதி இதனுள் வந்து எய்தும்" என்று மூவுலகும் ஒளியால் பொங்க ஒரு சோதி வடிவாக கோயில் உள்பட மேல் எழுந்து ஓங்கி அதனுள் ஒரு வாயிலையும் வகுத்துக் காட்டியருளினார். அப்போது திருஞான சம்பந்தர் நீண்ட சுடர் வடிவாய அப்பரமனைத்தொழுது போற்றி இவ்வுலகமெல்லாம் உய்யும் வழியை அருளிச் செய்வாராய் "ஞானமெய்ந்நெறிதான் யார்க்கும் நமச் சிவாயச்சொலாம்" என்று ஆனசீர் நமச்சிவாயத் திருப்பதி கத்தை வானமும் நிலனுங் கேட்க அருள் செய்து "இம் மணத்தில் வந்தோர் ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக' என்று அருளிச்செய்ய பிறவி வெள்ளத்திலேயழுந்திக் கிடந்து வரம்பு காணாது துயரக் கூட்டில் மயங்குவார்கள் இத் திரு மணம் சேவிக்க வந்த சிறப்பினாலே தமது பிறப்பு நீங்க (பிறப் பிறப்பில்லாப் பேரின்ப நிலையடைய) அச்சோதியுட் புகுந் தனர். சிவபாதவிருதயர், திருநீலநக்க நாயனார், திருமுருக நாயனார், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்டயாழ்ப்பாணர், மற்றும் திருமணம் சேவிக்க வந்தோர்கள், திருவருள் துணை கூட்ட வீடுபெற வந்தோர்கள், திருமணத்தில்தொண்டுசெய்ய வந்தோர், தொண்டர்கள், பரிசனங்கள், சிவிகை சுமந்து செல் பவர்கள் யாவரும் இச்சோதியுட்புக்கு இறைவன் திருவருளில் கலந்த உடன் திருஞானசம்பந்த மூர்த்திகளும் காதலியைக் கைப்பற்றிக் கொண்டு வலஞ் செய்தருளி 'நாதன் எழில் வளர் சோதி நண்ணி அதன் உட்புக்கு போதநிலை முடிந்த வழிப் புக்கொன்றி உடனானார்'. பின்னர் சோதி மறைந்து பழையபடி இறைவனுடைய கோயிலாகத் தோன்றியது. இதனை ஓதும் அன்பர்கள் சகல நலன்களும் இம்மையில் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்து பின்னர் பிறப்பிறப்பில்லாப் பேரின்ப நிலை யடைவர் என்பது உறுதி.

**பதிகப் பொழிப்புரை;—1.** உள்ளன்பு கொண்டு மனங் கசிந்து கண்ணீர் பெருகித் தன்னை ஜபிப்பவர்களை முத்தி நெறியாகிய நன்னெறிக்குக் கூட்டுவிப்பதும் நான்கு

வேதங்களிலும் உண்மைப் பொருளாக விளங்குபவனும் அனைவருக்குந் தலைவனுமாகிய சிவபெருமானின் திரு நாமமாகிய "நமச்சிவாய" என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

நான்கு வேதங்களும், பதினெட்டு புராணங்களும் ஒரு முகமாகச் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகப் போற்று கின்றன, இதையே திருப்பாசுரத்திலும் "வேத முதல்வன் முத லாக விளங்கி" எனத் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். எனவே வேத முதல்வனின் திருமந்திரமே மெய்ப்பொருள் என்பதாகிறது. மேலும் நான்கு வேதங்களுள் அதர்வண வேதம் மந்திர உருவமாய் மற்றைய மூன்றினுள் நிறைந்திருத் தலால், ரிக், யஜுர், ஸாமம் என்ற மூன்றுகவே கொள்ளப் பட்டு வேதத்ரயீ என்று சிறப்பாகக் கூறப்படுகிறது. அம் மூன்றினுள் சிறப்புடைய யஜுர் வேதம் நடுவணுப் அமைந் துள்ளது. அந்த யஜுர் வேதம் ஏழு காண்டங்கள் கொண் டது. அவ்வேழு காண்டங்களுள் நடுக்காண்டமான நான்கா வது காண்டத்தின் நடுவில் ஸ்ரீருத்ரப்ரசனம் அமைந்துள்ளது. அந்த ஸ்ரீருத்திரத்திலும் நடுவிலுள்ள "நம:சிவாய" என்ற சிவ பஞ்சாக்ஷரமே சிறந்தது எனப் பெறப்படுதலால் "வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச் சிவாயவே" எனப் பாடியுள்ளார் வேதம் தமிழ் செய்த கவுணியர் குலக் கோமகனுர். இதனையறிந்து உலகம் திரு வைந்தெழுத்தினை ஓதி உய்வதாக.

2. இறைவனுகிய சிவபெருமானின் திருவடிகளையே (தங்கட்குப் பற்றுக்கோடாக) நம்பும் பக்தர்கள் தங்கள் நாவி ஞல் உச்சரித்தால் மணமிக்க புதிய மலர்களின் தேன் போல இனிமை பயப்பதும், இந்த எல்லா உலகங்களுக்கும் செம் பொற்றிலகம் போன்றதும் நம்பனுகிய பரமனின் திருநாம மாகிய "நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுத்தேயாகும். (நம்புவார் என்பதற்கு விரும்புபவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். நம்பன் என்பது சிவபெருமானுடைய திரு நாமங்களில் ஒன்று; அல்லது நம்முடைய பெருமான் என்றும் கொள்ளலாம்)

3. உள்ளம் நெகிழ்ந்து, பொங்கி எழும் ஆசை மேலும் பெருக, பெருமானைச் சிந்தித்துக் கொண்டே தமது அழகிய கையில் திரு உருத்திராக்ஷ மாலை கொண்டு விதிப்படி எண்ணிச் செபிப்பவர்களைத் தக்கபடி தேவவுலகத்தினராகச் செய்விப்பது நக்கனைகிய (ஆடையிலி) சிவபிரானின் திருநாமமாகிய "நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுத்தே யாகும்.

நக்கன் என்று சிவபிரான் கூறப்படுவது திசைகளையே தமது ஆடையாக உடையவராய் வியாபித்து வேறு உடை ஏதும் வேண்டாமை பற்றியாகும். நக்னன் என்ற ஸம்ஸ்க்ருத சொல்லும் இதே பொருளுடையது. மேலும் தாருகவனத்தில் ரிஷி பத்தினியரிடம் பிக்ஷாடனமூர்த்தியாகச்சென்ற பொழுது ஆடையின்றியே சென்றுர் என்ற புராணவரலாறும் ஈண்டு கருதற்பாற்று.

4. இனிமையான சொற்களால் நயம்பட ஓதவல்லவர்களை எவரேனும் அண்டினுல் அங்ஙனம் அண்டியவர்களையும் கண்டு இயமன் தூதர் அவர்கள் பக்கம் சேரப் பயப்படுவர். (இத்தகைய சிறப்பு வாய்ந்தது யாதெனின்) நியமமாகத் தன்னைத் தியானித்து வணங்குபவர்க்கு இனியவனும், நெற்றியில் கண்ணினை உடையவனுமான சிவபெருமானின் திருநாமமாகிய "நமச்சிவாய" என்ற திருவைந்தெழுத்தேயாகும்.

"ஓதவல்லார் தமை இன்சொலால் நயம் வந்து கூட்டி நண்ணினுல்" என்று கொண்டு திருவைந்தெழுத்தினை ஓதும் அருளாளர்களை இனிய சொற்களுடன் நட்பு கொண்டு எவரேனும் அடைவரேல் அவர் பக்கலிலும் இயமன் தூதர் சேர அஞ்சுவர் என்று பொருள் உரைப்பினும் அமையும். இதன் கருத்து யாதெனின் ஸ்ரீபஞ்சாக்ஷர மகிமை அதைச் செபிப்பாரை மட்டுமன்றி அங்ஙனம் செபிப்பவரை நட்பாயடைபவரையும் காக்கும் என்பதாகும்.

"நியமம்" என்பது முறையாக ஒரு ஏற்பாட்டிற்குட்பட்டு வழிபடுதலை வழக்கமாகக் கொள்ளுதல்.

5. கொலைத் தொழிலில் ஈடுபட்டவர்களாக இருப்பினும், நல்ல குணங்களும் அவற்றால் ஏற்படும் பல நன்மைகளும் இல்லாதவர்களாயினும்(ஏதேனும் ஒரு சிறுதுளி பூர்வ புண்ணியத்தினால் உந்தப்பட்டு) உச்சரிப்பார்களேயானால் எல்லாவிதமான தீங்குகளினின்றும் நீங்குவர் என்று பெரியோர்கள் கூறுவர். அத்தகைய மகிமை வாய்ந்தது, எல்லோருக்கும் நன்மையையே செய்பவனாகிய சிவபிரானின் திருப்பெயரான "நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

திருவைந்தெழுந்து மந்திரம் முழுமையாகவன்றி 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்களை மட்டுமே வேறு ஏதேனும் காரணமாகப் பேச்சு மத்தியில் ஓதியவரும் நற்கதி அடைவார்கள் என்று பாகவதபுராணம் கூறுகிறது. ஸ்காந்த மஹாபுராணம் உபதேச காண்டத்தில் இது, நன்கு வலியுறுத்தப் படுகிறது. "சிவனெனும் துணைச் சீரெழுந்தினை, நுவலுவார் கதி நொய்தினெய்துவர்" என்றல்லவோ கந்தபுராண ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கூறுகின்றார்? சிவநாமத்தின் பெருமையினை ஆக்யா ஷஷ்டி என்ற பெயரில் அறுபது சுலோகங்களாகத் திருவிசநல்லூர் ஸ்ரீதர வேங்கடேச ஐயாவாள் பாடியுள்ளார்கள். அதனை நாம் சிவநாம மகிமை என்ற பெயரில் தமிழ் உரைநூலாக வெளியிட்டுள்ளோம். நேயர்கள் அந்த நூலினையும் படித்துப் பயன் அடைய வேண்டுகிறோம்.

6. மந்தரமலை போன்ற பாவங்களைச் செய்து பந்தங்கள் உடையவர்களும் உச்சரிப்பார்களேயானால் அவர்களது கொடிய வினைகள் தீர்ந்து போகும். (அது மட்டுமல்ல) அவர்களுக்குச் செல்வமும் பெருகும். அத்தகைய சிறப்பு கொண்டது நந்தி என்ற பெயர் கொண்ட சிவபிரானது திருப்பெயரான "நமச்சிவாய" என்ற திருவைந்தெழுத்தே யாகும்.

நந்தி என்பது சிவபெருமானின் பெயர். "அப்பனை நந்தியை ஆரா அமுதினை..." என்றார் திருமூலரும்.

7. ஏழு வகையான நரகங்களுக்கே செல்ல வேண்டிய நிலையில் உள்ளவர்களாயினும் (அத்தகைய கொடிய பாவிக

ளுங்கூட) உச்சரிப்பார்களேயானால் அம்மந்திர செபம் அவர் களை உருத்திர கணங்களோடு சேர்த்து வசிக்கச் செய்யும் என்று (உண்மையறிந்த) பெரியோர் கூறுவர். அத்தகைய அருமந்திரம் வரதன் நாமமாகிய "நமச்சிவாய" என்ற திரு வைந்தெழுத்தே யாகும். வரதன்—வரமருளுபவன்.

8. இலங்கையரசனான இராவணன் பெயர்த்தெடுக்க முயன்ற திருக்கயிலாய மலையின்மேல் எழுந்தருளியுள்ள சங்கரன் தனது கால்விரலை ஊன்றலும், அதனால் நெரிபட்டு அவன் வாய் விட்டரற்ற அவனுக்கும் உய்யும் நெறி அருளி னது நன்மையைச் செய்வதையே தனது இயல்பாக உடைய சிவபெருமானது திருநாமமாகிய "நமச்சிவாய" என்ற திரு வைந்தெழுத்தே யாகும்.

9. தாமரை மலரில் வீற்றிருப்பவனாகிய நான்முகனும், தாமரை மலர் போலும் கண்களையுடைய திருமாலும், எல் லோருக்குந் தலைவராகிய சிவபிரானது திருமுடியையும், திரு வடிகளையும் தேடுந்தன்மையினை மேற்கொண்டவராய் இரு வரும் எதையுங் காண இயலாதவராகித் தமது செயலுக்கு வருந்திப் பின்னர் அவர்கள் நல்லறிவு பெற்று ஓதி உய்ந்தது "நமச்சிவாய" என்ற திருவைந்தெழுத்தே யாகும்.

தமது பலத்தினால் செருக்குற்றுக்காண முயற்சித்தபோது இயலாது போய்ப் பின்னர் பக்தியுடன் திருவைந்தெழுத்து ஓதிய பின்னர் சிவபிரானைக் காணப்பெற்று உய்ந்தார்கள் என்றபடி.

10. தேவர்கள் வேண்ட (அவர்கட்கு ஊறு செய்த) நஞ்சினை உண்டு அந்நஞ்சு கழுத்தில் தங்கிய கழுத்தினை யுடைய நீலகண்டனான சிவபெருமானின் திருநாமமாகிய "நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுத்து மந்திரத்தை புத்தர்களும் சமணர்களும் ஆகிய கொடுஞ்சொற்களையுடை யோர் அடைந்திடும் பேறு பெற்றிலர் என்று மேலோர் கூறுவர்.

கஞ்சி மண்டையர் என்பது மண்டை என்னும் ஒரு வித பாத்திரத்தில் கஞ்சியைக் குடிக்கும் வழக்கம் கொண்ட பௌத்தர்களையும், கையிலுண் கையர்கள் என்பது கைகளையே பாத்திரமாகக் கொண்டு அதில் உணவு ஏற்றுப் புசிக்கும் வழக்கம் உடைய சமணர்களையும் குறிக்கும்.

**11.** சிவபெருமானது திருநாமமும் மந்திரமுமாகிய "நமச்சிவாய" என்னும் சொல் முடிவால் தமிழ்வல்ல திருஞான சம்பந்தன் உரைத்த இத்திருப்பதிகத்தை மனத்தினுள் மகிழ்ச்சி கொண்டு ஏத்தவல்லவர்கள் அனைவரும் பந்தம் பாசம் ஆகியவற்றை அறுக்க வல்லவர்கள் ஆவார்கள். (மற்றையோர் அம்மாதிரி வல்லமை உடையவராகார் என்றபடி).

இத்திருப்பதிகப் படன பலன் பந்த பாசங்களை அறுக்கும் வல்லமை பெறுதலாகும். பந்தமும் பாசமும் அற்றுப் போனால் கிட்டுவது பிறப்பிறப்பில்லாப் பேரானந்தமே யன்றோ?

திருஞானசம்பந்தர் திருவடிகளே சரணம்

சிவம்

---

# திருஞானசம்பந்தர் துதி

திருச்சிற்றம்பலம்

வையம் மகிழயாம் வாழ அமணர் வலிதொலைய
ஐயன் பிரமபுரத் தாற்கு அம்மென் குதலைச் செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
தையல் அருள் பெற்றனன் என்பர் ஞானசம் பந்தனையே.

பந்தார் விரலியர் வேள் செங்கட் சோழன் முருகன் நல்ல
சந்தார் அகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தில் இட்டடி யேன் கொடுத்த
அந்தாதி கொண்ட பிரான் அருட் காழியர் கொற்றவனே

திருச்சிற்றம்பலம்

—நம்பியாண்டார் நம்பி அருளிய
திருத்தொண்டர் திருவந்தாதி



சீகாழி பிரமதீர்த்தம். இதன் கரையில் தான் திருஞானசம்பந்தர் அம்மை திருமுலைப்பால் ஊட்டப்பெற்ருர்.



திருக்கோலக்கா — வாளைகள் பாயும் மடை

சிவமயம்

# இப்பதிப்பில் வந்துள்ள தலங்களின் விசேடங்கள்

[சுருக்கம்]

## 1. திருப்பிரமபுரம்

இது சீகாழி என்றும் சீர்காழி என்றும் பிரசித்தமாய் வழங்கப்படும் தலம். சென்னை-மாயூரம் மார்க்கத்தில் ஒரு புகை வண்டி நிலையம். புகை வண்டி நிலயத்திலிருந்து சுமார் ஒரு கி. மீட்டர் தூரத்தில் ஆலயம் உள்ளது.

காவிரி வட கரையில் 14 வது பதியாகிய இத்திருத்தலம் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம். பூந்தராய், புறவம், சண்பை, காளிபுரம், கொச்சைவயம், கழுமலம், சிரபுரம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்களை உடைத்து. இப்பன்னிரு திருப்பெயர்களும் பன்னிரு யுகங்களில் வழங்கினவையாகக் கூறப்படுகின்றது.

பேரூழிக் காலத்தில் கடல் பெருகிப்பொங்கி எழுந்தபோது இறைவன் பிரணவத்தையே தோணியாகக் கொண்டு எழுந்தருளி இத்தலத்தில் கோயில் கொண்டனர். இத்தலத்தில் குரு, லிங்க, சங்கமமாகிய மூவகைத் திருமேனிகளையும் வழிபடலாம். தோணியப்பர் குரு,லிங்கமூர்த்தி பிரமபுரீசர்) சங்கமம் சட்டை நாதர். இத்தலத்திலேதான் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவதரித்தார். மற்றும் கணநாத நாயனார் அவதாரத் தலமும் இதுவே. திருஞானசம்பந்தருக்குத் தனி ஆலயம் சோமாஸ்கந்தமூர்த்தத்தைக் குறிக்கும் வகையால் இறைவன் இறைவி கோயில்களுக்கு மத்தியில்



திருக்கோலக்கா திருக்கோயில்



திருவெண்காடு திருக்கோயில்

உள்ளது. திருஞானசம்பந்தரை சுப்பிரமணியரின் அம்சமாக வும் அவதாரமாகவும் வழிபடும் ஐதிகம் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சட்டைநாதர் என்ற சங்கமத் திருமேனியுடைய பிரான் இரணியனைச் சங்கரித்த நரசிங்கத்தைச் செருக்கழித்து அதன் தோலைச் சட்டையாகத் தரித்துக் கொண்டவர். ஆபதுத்தாரணர் என்ற திருநாமத்துடன் மிக அரிய வரப் பிரசாதியாய் அழகாக எழுந்தருளி இருக்கின்றார். திருமாலின் வாமனாவதாரத்தையும் செருக்கொழித்து அவரது முது கெலும்பை கையில் தண்டாகக் கொண்டிருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது. பிரதி வெள்ளிக் கிழமையிலும் இரவில் இவருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. ஆபதுத் தாரணர் மாலை என்ற அரிய துதி நூலும் திருத்தருமை ஆதீனத்தாரால் பிரசுரிக்கப் பட்டுள்ளது.

இருபத்திரண்டு தீர்த்தங்கள் உளதாகக் கூறப்படுகிறது. முக்கியமானது பிரமதீர்த்தம். இத்தீர்த்தத்தின் கரையில்தான் திருஞானசம்பந்தர் அழுது அழைத்துச் சிவஞானப்பால் ஊட்டப் பெற்றார்.

முருகன், காளி, பிரமன், இந்திரன், அசுரகுரு முதலி யோர் வழிபட்ட தலம் இது. இந்திரன் மூங்கில் வடிவில் மறைந்து நின்று வழிபட்டதாகக் கந்த புராணம் கூறும்.

திருத்தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நி தானம் அவர்களால் ஆலயம் மிகச் சிறந்த முறையில் பரி பாலிக்கப்பட்டு வருகிறது.

இத்தலத்தைப்பற்றிய வேறு பல்வகைச் சிறப்புகளையும் பன்னிரு பெயர்க்காரணமும் தக்க இடங்களில் அடுத்து வரும் தமிழ் மாலைகளில் கொடுக்கப்படும்.

## 2. திருக்கோலக்கா

காவிரி வடகரை 15 வது திருத்தலமான இது திருத்தாள முடையார் கோயில் எனவும் வழங்கப்படுகிறது. இங்கு திரு





திருவலிதாயம் திருக்கோயில் இரு–காட்சிகள்

ஞானசமபந்தர் பொற்ருளம் இறைவனுல் அருளப் பெற்ருர். இத்தலம் சீகாழியினின்றும் தென்மேற்கில் சுமார் ஒரு கி. மீ. தூரத்தில் உள்ளது,

## 3. திருநெடுங்களம்

தற்பொழுது திருநட்டாங்குளம் என்று வழங்கப்படும் இத்தலம் தஞ்சை-திருச்சி மார்க்கத்தில் தொண்டைமான் பட்டி இரயில் நிலயத்தினின்று தெற்கில் சுமார் 4 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. காவிரித் தென்கரையின் 8 வது தலம். வங்கிய சோழன் என்பவன் பூசித்துப் பேறு பெற்ற தலம். 11 வது திருமுறையில் உள்ள பின்வரும் பாடலால் போற்றப் பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலம்

தொட்டுத் தடவி துடிப்பொன்றுங் காணுது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்னுமுன் ஏழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாதம் நினை.

திருச்சிற்றம்பலம்

## 4. திருவலிதாயம்

தற்பொழுது பாடி என வழங்கப்படும் இத்தலம் தொண்டை நன்னுட்டின் 21-வது பதியாகும். இது சென்னை நகரிலிருந்து அம்பத்தூர் செல்லுப் பேருந்து மார்க்கத்தில் இருக்கிறது. வலியன் என்ற வால் நீண்ட கருங்குருவி பூசித்துப் பேறு பெற்ற தலமாதலின் திருவலிதாயம் எனப் பெயர் பெற்றது. பரத்வாசர் என்ற மாமுனிவர், வியாழன் என்ற தேவகுரு, ஸ்ரீ ராமதூதனுன அனுமார் ஆகியோரும் வழிபட்டு முத்தியடைந்ததாகக் கூறப்படுகிறது.

## 5. திருமுதுகுன்றம்

இது நடுநாட்டுத் தலங்களுள் ஒன்ருகும். தற்பொழுது விருத்தாசலம் என்று பிரசித்தமாய் வழங்கப்படும் புகை

வண்டி சந்திப்பு. சென்னை—திருச்சி குறுக்குவழி (Chord line) யில் உள்ளது மணிமுத்தாறு நதி பாய்கிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் பழமலை நாதரிடம் பதிகம் பாடிப் பெற்ற பொன்னை இந்த நதியில் தான் போகவிட்டுப் பின்னர் திருவாரூர் திருக்குளத்தில் எடுத்துக் கொண்டார். சுக்ராசாரியார், யாக்ஞவல்க்ய முனிவர், சிகண்டி, கௌசிகன், அகஸ்தியர் முதலியோர் பூசித்த தலமிது. தலவிருட்சம்: வன்னிமரம்.

எல்லாமலைகளும் தோன்றுவதற்கு முன்பாக சிவபெருமான் தாமே ஒரு மலைவடிவமாக நின்றமையால் பழமலை எனவும் முதுகுன்றம் எனவும் வழங்கப் படுகிறது.

காசிமாநகரினைப் போலவே இத்தலத்திலும் இறக்கும் உயிர்களுக்குச் சிவபெருமான் பஞ்சாக்ஷர உபதேசம் செய்து முத்தியளிக்கிறார் எனவும் அம்மை பெரியநாயகியார் உயிர்களைக் களைப்புத் தீர்த்து அருளுகிறார் என்றும் கூறப்படுகிறது. இக்காரணம் பற்றி இது 'விருத்த காசி' எனவும் பெயர் பெறும்.

## 6. திருவெண்காடு

இத்திருத்தலம் விழுப்புரம்-மாயூரம் புகைவண்டி மார்க்கத்தில் சீர்காழி புகைவண்டி நிலையத்தினின்றும் சுமார் 12 கி. மீ. தூரத்தில் உள்ளது. பேருந்து வசதிகள் உண்டு.

இந்திரனும் ஐராவதமும் பூசித்துப் பேறு பெற்ற திருத்தலம். ஆனந்தத் திருநடனஞ் செய்த சிவபெருமானின் முக்கண்களினின்றும் விழுந்த நீர்த்துளிகளே சோம, சூர்ய, அக்னி தீர்த்தம் என்ற முக்குளமாயின என்று தலபுராணம் கூறுகிறது. இத்தீர்த்தச் சிறப்பினை திருஞானசம்பந்தர் பதிகத்தில் கூறியுள்ளார். மெய்கண்டதேவர் அவதரித்த வரலாறும் பதிக வரலாற்றில் கூறப்பட்டுள்ளது காண்க. சுவேதகேது என்ற அந்தணனுக்காக இங்கும் கால ஸம்ஹாரம் நிகழ்ந்தது என்று கூறப்படுகிறது.

தல விருக்ஷம் — வடவாலமரம், கொன்றைமரம், வில்வ மரம். இங்குத் திருஞான சம்பந்தர் எழுந்தருளிய போது தலம் எங்கும் சிவலிங்கத் திருவுருவாகவே அவர்களுக்குக் காட்சியளித்தது என்று கூறுவர்.

குறிப்பு:— நமச்சிவாயப் பதிகங்கள் குறிப்பிட்ட ஒரு தலம் பற்றியல்லாமல் பொதுப் பதிகங்களாதலின் அவற்றிற்குத் தல மகிமை கொடுக்கப் படவில்லை. 'காதலாகிக் கசிந்து' என்ற பதிகம் திருநல்லூர் பெருமணம் என்ற ஆச்சாள் புரத்தில் பாடியதாகும். இத்தலம் பற்றிய குறிப்புகள் பின்னர் தக்க இடத்தில் கொடுக்கப் படும்.

சிவம்

---

# சீகாழி

## பன்னிருபெயர் திருப்பாடல்கள்

திருச்சிற்றம்பலம்

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த்தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ்சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங்கு ஆதியாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலம் நாம பரவுமூரே

விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங்குரு மேற்சோலை
வளங்கவரும் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம் வயப்புறவ மண்மேல்
களங்கமிலூர் சண்பை கமழ் காழிவயம் கொச்சை கழுமலமென்றின்ன
இளங்குமரன் தன்னைப் பெற்று இமையவர்தம் பகையெறிவித் திறைவனூரே

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் தேவாரம்

# திருப்பாடல் முதற்குறிப்பகராதி

திருப்பாடல் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

௨

சிவமயம்



திருச்சிற்றம்பலம்

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணில்நல் லஃதுறுங்கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோடு இருந்தஎம் பிரான்தனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவார் அவர்கள் போய் விண்ணுலகு ஆள்வரே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் தேவாரம்